THE

# VIVEKA CHINTAMANI

A Monthly. Tamil Magazine and High Thought Review,

Devoted to the Diffusion of Practical Truth and Knowledge.

ING WITH THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE, & ETHICS. ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS

**God is Love : Knowledge is Power : AUM.**
**" Live and Learn"—"** ஓதுவதொழியேல்.''
*SATYAMEVA JAYATI.*

**VOL. XVI.**

*May 1907-December 1908.*

# விவேகசிந்தாமணி

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

அறிவுடையாரெல்லாமுடையார் அறிவிலா
ரென்னுடையரேனுமிலர்.—திருக்குறள்.

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக. —திருக்குறள்.

16-ம் புத்தகம்.

1907–ஹு மேமீ முதல் 1908–ஹு டிசெம்பர்மீ வரை.

PUBLISHED BY
The Secretary, Diffusion of Knowledge Agency,
Lalitalaya, Mylapore, Madras, S.
For THE VIVEKA CHINTAMANI PUBLISHING COMMITTEE.
1907-1908.

d Vol. Rs. 5. [Unbound Vol. R. 4.

[iii]

# TABLE OF CONTENTS.

## VOL. XVI. (MAY 1907—DEC. 1908.)

### No. 1, for MAY, 1907.



### 1907-ம் வரு மேமீ 1-வது சஞ்சிகை.



### No. 2. for JUNE, 1907.



### 1907-ம் வரு ஜூன்மீ 2-வது சஞ்சிகை.

TABLE OF CONTENTS.

TABLE OF CONTENTS.

[VI]

## TABLE OF CONTENTS.

Page.

### 1907 ௵ அக்டோபர் ௴ 6-வது சஞ்சிகை.



### No. 7. for MAY, 1908.



### 1908 ௵ மே ௴ 7-வது சஞ்சிகை.



### No. 8. for JUNE, 1908.

TABLE OF CONTENTS.

TABLE OF CONTENTS.

Page.

## Nos. 10-11 for OCTOBER & NOVEMBER 1908.



## 1908-ம்ஞூ–அக்டோபர், நவம்பர்மூ 10–11–வது சஞ்சிகைகள்.



## No. 12. for DECEMBER, 1908.



## 1908-ம்ஞூ டிசம்பர்மூ 12-வது சஞ்சிகை.

*"Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்யம்வத.—**Speak the Truth.**

**"Hitch our Wagon to a Star.** **"To Thine Own Self be True.**




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] ௨ [God is Love : Knowledge is Power: *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம். 16] 1907-ம்ஹூ மேமீ. [சஞ்சிகை 1.

# "Don't be anxious about me! What God does, He does for the Best."

## "என்னைப்பற்றிக் கவலைப்படவேண்டாம். ஆண்டவன் அடித்தாலும் அணைத்தாலும் அது நன்மைக்கேயாகும்!"

மேமீ 9௳ வியாழக் கிழமை ஒரு விசேஷதினம். அற்றைத்தினத்தை "அஸ்ஸென்ஷன் தர்ஸ்டே" என்று கிறிஸ்தவர்கள் கொண்டாடுவர்கள். அதாவது யேசுகிறிஸ்து அவர்கள் பரமபதமடைந்து பரமுக்திபெற்ற தினம். கிறிஸ்துமதம் பரவியுள்ள எல்லாதேசங்களிலும் அன்றைத்தினம் விடுமுறைநாளாகக் கொண்டாடப்பட்டது. அப்படியே இந்தியாமுழுவதிலும் அன்றைத்தினம் ஸர்க்கார்விடுமுறைநாளாகக் கொண்டாடப்பட்டது. இது இற்றைக்கு 1907-வருஷங்களாக வருஷந்தோறும் கொண்டாடப்பட்டு வரும் ஒரு திருநாள்.

இந்த மேமீ 9௳ வியாழக் கிழமையானது இந்தியாவுக்கு இன்னொருவிதத்தில் விசேஷமாயுள்ளது. எப்படியெனில் அதை விவரமாய்ச் சொல்வோம். அன்றையதினம் இந்தியா கவர்ன்மெண்டார் பஞ்சாப் லெப்டினென்ட்-கவர்னர் ஸர் டென்ஸில் இப்பெட்ஸன் அவர்கள் மிக வருந்திக்கேட்டுக்கொண்டதின் பேரில் 1818-ம் வருஷத்து 3-வது

ரெகுலேஷன்படி பஞ்சாபில் ஜனசுதந்தரம் வேண்டுமென்று சுக்ஷிகட்டிப்பேசிப் பிரசங்கம் செய்து ஜனங்களை உற்சாகப்படுத்திக் கிளப்பிவிட்டு வரும் இருவரை விசாரணையின்றி ஆலோசனை சபையிலுள்ள கவர்னர்ஜெனரலினுடைய இஷ்ட மிருந்தபடியே வாரண்டில் பிடித்து யாருக்குந்தெரியாமல் எங்கேயோ ரகசியமாயனுப்பிவிடத் தீர்மானித்து விட்டதாகவும், அதற்கு இந்தியா மந்திரியாகிய மிஸ்டர் மார்லி அவர்கள் சம்மதித்திருக்கிறதாகவும் பார்லிமெந்து காமன்ஸ் சபையில் முன்னம் முதல்மந்திரியாகவிருந்த மிஸ்டர் பால்போர் அவர்கள் கேட்டகேள்விக்கு பதிலாக உத்தரம் சொன்னசெய்தி தந்திமூலமாய் இந்தியாவுக்கு வந்தது. இந்தத் தந்திசமாசாரம் இந்தியாவுக்கு எட்டினதோ இல்லையோ உடனே கொட்டைப்பிராந்து குருவியை அடித்துக்கொண்டு போகிற மாதிரி சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் தருப்பு தளவாடங்களுடன் தந்திரமாய் லாஹோரிலுள்ள லாலா லஜபதிராய் என்னும் ஜனசிரேஷ்டரைப் பிடித்துக்கொண்டு ஒரு க்ஷணப்பொழுதில் "மோடார்காரிலும்"—'ஸ்பெஷல் டிரெயினிலு'மாக வேகம் வேகமாய்ப்போகும் வண்டிகளில் அவரைக் கண்ணுக்குக் காணாமல் கொண்டுபோய்விட்டார்கள்.

வியாழக் கிழமை மத்தியானம் 2½-மணி சுமாருக்கு லாலா லஜபதிராய் அவர்கள் அவருடைய பெங்களாவில் அவர் வாசிப்பதற்கென்றமைத்த அறையில் உட்கார்ந்து சிநேகிதர்களோடு பேசிக்கொண்டிருந்தார். அப்பொழுது இரண்டு சுதேசபோலீஸ் இன்ஸ்பெக்டர்கள் அவர் அறையில் புகுந்து அவரை டிஸ்திரிகட் மாஜிஸ்திரேட்டு உடனே கோர்ட்டில் பார்க்க விரும்புகிறாரென்று சொன்னார்களாம். அப்படியா, இதோ வருகிறேன் என்று வண்டி போட்டுக்கொண்டு வரச்சொன்னார். வண்டி வந்ததும் அவர் வெளியே வந்து வண்டியிலுட்கார்ந்து கொண்டாரோ இல்லையோ, குதிரைவீரர்கள் உருவினகத்தியும் கையுமாக அவர் வண்டியைச்சூழ்ந்து கொண்டு அவரை நேர போலீஸ் டாணாவுக்கு சவாரியில் கொண்டுபோனார்கள். அங்கே வந்து இறங்கினதும் டிஸ்திரிக்ட் மாஜிஸ்திரேட்டும், டிவிஷனல் கமிஷனரும் அவரை யெதிர்கொண்டு அந்த அறையிலுள்ள சுதேசிகள் எல்லாரையும் வெளியே யனுப்பிவிட்டு கவர்னர்ஜெனரல் அவரைப்பிடித்து கண்ணுக்குக் காணாதபடி தேசத்தைவிட்டுக்கொண்டு போகும்படி பிறப்பித்திருக்கும் வாரண்டை அவருக்குக் காட்டினார். அதைப் பார்த்ததும் அவர் தன்னடக்கம் குலையாது இரண்டொரு கடிதமட்டுமெழுத அவகாசம் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அவரைப்பிடித்த சூரப்புலிகள் அதற்கு இசைய, அவசர அவசரமாய் அவருடைய சிநேகரொருவருக்கு ஒரு கடிதமும் அவருடைய பிள்ளைக்கு ஒருகடிதமும் எழுதினார். அந்த சமயத்தில் அவ்வளவு காப்ராவின் மத்தியில் அந்த ஜனசிரேஷ்ட சிங்கம் சிறிதும் தன்மனம் சலியாது தன்னிலை குலையாது இதன் தலையில் நீட்டிய வார்த்தைகளை அவருடைய சிநேகருக்கு எழுதின கடிதத்தில் வரைந்தார். "என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்! ஆண்டவன் அடித்தாலும் அணைத்தாலும் அது நன்மைக்கேயாகும்!" என்று அஞ்சா நெஞ்சுடன் ஆத்மபுத்தி நிறைந்தவராய் உறுதிகூறினார்.

யேசுநாதரைச் சிலுவையிலடித்துக் குரூரமாய்த் துன்பப்படுத்திக் கொலைசெய்யுங் காலையிலும் அம்மஹாபுருஷர் தம் துன்பத்தைப் பாராட்டாது, "ஸ்வாமி! இவர் அறியாமையால் இக்கொடுமைசெய்கிறார்கள்! இவரை மன்னிக்கவேண்டும்!" என்று தனக்குக் கொடுமை

புரிந்த ராணுவவீரர்கள் பாவத்தை மன்னிக்கும்படி வேண்டிக்கொண்டாரென்று கிறிஸ்து வேதம்முறையிடுகிறது. இந்த ஸ்வதேசமஹான் இருந்திருந்தாற்போல் திடீரென்று அவருடைய பிள்ளைபெண்டுகளோடு சொல்லிக்கொள்ளவும் தருணமின்றி கொக்கு மீனைக் கௌவுமாறுபோல் சர்க்காரால் கௌவப்பட்டு அவர்கள் மூக்கிலகப்பட்டுக்கொண்டிருக்கையிலும் மனம்சிதறாது "என்னைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம்! ஈசன் செயல் எப்படியாயினும் அது நாசம்தராது! எல்லாம் நமது நன்மைக்கே"யென்று அஞ்சாநெஞ்சராய், அமர்ந்த சித்தத்தினராய், தன்னிலை குலையாது தன்னைத்தான் காப்பாற்றிக்கொண்டதன்றி, தன்னை நேசித்துள்ளவர்களுக்கும் திடங்கூறும்படியான மனோதிடமும் உறுதியும் காட்டினாரே அவரல்லவோ ஆரியபுத்திரர்! ஆரியவர்த்தத்தில் அனாதிகாலமாயுதித்து விளங்கிய மஹரிஷிகள் ராஜரிஷிகளின் இரக்தம் இன்னமும் நமது நாடி நரம்புகளில் ஓடிக்கொண்டிருக்கிறதென்பதற்கு இதைவிட வேறு பரிசோதனையென்ன வேண்டும்! ஆரியபுத்திரர்கள் என்ன தான் ஆத்மபுத்தியிழந்து தடுமாறினாலும் அவர்களுடைய பூர்வ வாசனை அவர்களை விட்டு நீங்கவில்லையென்பது ஸ்பஷ்டமாய் விளங்குகிறது. மிஸ்டர் மார்லியும், லார்ட் மின்டோவும் இப்படி நம்மை மகா கடுமையாகப் பரிசோதித்து நமது ஆரியத்தன்மையை நமக்கே தெரியும்படி விளக்கிக்காட்டினதற்காக அவர்களுக்கு நாம் அனந்தங்கோடி வந்தனம் செய்யக் கடமைப் பட்டிருக்கிறோம்.

ஆனால் நாம் பிறந்தது முதல் நமது கவர்ன்மெண்டு என்று அபிமானம் பாராட்டிக்கொண்டாடிய பிரிடிஷ் கவர்ன்மெண்டு ஒருபொழுதும் அநியாய அக்கிரமங்களுக்கு உடன்படாது என்று நாம் இதுகாறும் நம்பியிருந்த நம்பிக்கை வீண்போகும்படி நம்மனதைப் புண்படுத்தினதற்காக நாம் மிகவும் மனமுருகி வருந்துகிறோமென்பதும் ஸத்யம், உண்மையுள்ள ஒரு புருஷன் வெகு காலமாகத் தான் ஹிருதயபூர்வகமாக நம்பியிருந்த நம்பிக்கையை திடீரென்று விடுவதென்றால் அது அவன் பிராணனைக்கொடுப்பதிலும் மேலான வருத்தத்தைத் தருமென்பது மனோதர்மவாசி. இதை யறிந்தவர் நம் மனம் தவிக்கும் தவிப்பைத் தாமேயறிவர். அறியாதார் சொல்லியுமறியார். உள்ளத்துணர்வு உள்ளனுபவத்தால் உணர்ந்தறியத்தக்கதேயன்றி, ஒருவருக்கொருவர் விண்டு காட்டுந்தன்மையதன்று. நாம் இராஜாங்க விஷயங்களில் எப்பவும் தலையிட்டுக்கொண்டதில்லை. தலையிட்டுக்கொள்ளும் ஸ்வபாவமும் நம்மிடத்தில் இல்லை. எதையும் சாக்ஷிமாத்திரமாயிருந்து பார்ப்பது நம்முடைய ஸ்வபாவம். ஆனாலும் ஆத்மத்துரோகம், அநியாயம் இவைஎல்லா தர்மங்களுக்கும் பொது. அதுவும் இராஜதர்மம் இவ்விருவகையிலும் மேலோர் வகுத்த வழிவிட்டு விலகினால் உலகம் தலைகவிழ்ந்து போய்விடும். பிரிடிஷ் இராஜாங்கத்தின் பெருமையெல்லாம் இப்படிச் சிறுமைப்பட நேர்ந்த சீர்கேட்டுக்கு மனமிரங்கி வருந்துவோமோ! அல்லது, பெருமைப்பட வாழ்ந்த பெருந்தன்மையாளருக்குக் கலிவேற்றுமையால் நேர்ந்த சிறுமைப்பாட்டை நினைந்து மனதிரங்கி வருந்துவோமோ? அல்லது, எல்லாம் கலிக்கூத்தென்று பார்த்திருந்தும், முன்பின் வருவது போவது வியக்தமாய்த்தெரிந்திருந்தும் மாயவன் வலைப்பட்டு அவன் மாயாலீலையிலீடுபெட்டு இப்படி நாமும் உள்ளமுருகி ஊரோடுடன்பட்டு கபநாடகசூத்ரதாரியாயிருந்து ஆட்டிவைப்பவன் ஆட்டத்தைக்கண்டும் காணாது போலிருந்து நடிக்க வேண்டிய நாட

கத்தின் வேடிக்கையைக்கண்டு மகிழுவோமோ!—ஒன்றும் விளங்கவில்லை. இராஜாதர்மம் குலைந்தால் இராஜ்ஜியம் குலையுமே யென்கிற ஏக்கமொன்றே தற்பொழுது நம்மனதைக் கொள்ளைகொண்டு, அர்ச்சுனன் சோகமுற்றதை யொக்க, மனச்சோர்வையுண்டுபண்ணுகிறது. அன்றைக்குப் பார்த்தசாரதியாயிருந்து அவனுக்கு வழிகாட்டிய கபடநாடகசூத்திரதாரி இன்றைக்கு மிருக்கிறான். அவனைப்பணிந்து தொழுதால் நமக்கும் வழிகாட்டுவான் என்கிறதைரியம் மட்டும் மனதை விட்டுச்சிறிதும் நீங்கவில்லை. "என்னென்ன செய்கினு நீயேதேதியற்றிடினும், உன் பிள்ளை உன்னடிமை, உனக்கேநானர்ப்பணம் காண்!" என்று சொன்ன சொல் தவறாது நிற்பதொன்றே நம்கடன்.

"அன்றே யென்றனுவியும் பொருளு முடைமையெல்லாமும்
குன்றே யனையாய்! எனையாட்கொண்டபோதே கொண்டிலையோ
இன்றோரிடையூறெனக்குண்டோ எண்டோள்முக்கண்ணெம்மானே
நன்றேசெய்வாய் பிறசெய்வாய் நானோ இதற்குநாயகமே!"

என்றெம்பெருமனார் மணிவாசகப்பெருமான் செப்பிய திருவாக்கைவிட வேறு நாம் செப்பவொன்றறியேம்! அவரைவிட ராஜாங்கவித்தையிலாவது இராஜதந்திரத்திலாவது மேம்பட்டாரல்லாத நாம் அவரைத்துணைக்கோடி அவர் வழிப்பட்டு நின்றால் செய்வகையின்னதென்று அவர் தாமே திருவருள் சுரந்து காட்டுவார்.

ஓம்தத்ஸத். ஸத்யானந்த:



ஜகஜ்ஜநநீஸத்குரோ.

# திருவருட்கதம்பம்.

(திருவையாறு, லக்ஷ்யானந்தம்.)

256-வது பக்கத்தொடர்ச்சி.

36. பண்டுளமுனிவரெல்லாம் பாடுபட்டொன்றொன்றாகச்
சென்றடைந்திட்டஞானச் செம்பொருட்டிரவியத்தைக்
குன்றுபோற்சேகரித்துக் குருவெனும்பெட்டகத்துள்
நின்றவர்நிறைக்கலானார் நேர்மையோடெங்கட்கென்றே.

37. மெய்யொடுவாய்மனத்தால் மேவுதற்காகாவொன்றை
மெய்யொடுகலந்திட்டொன்றாய் மீளாமலெமையதாக்க
மெய்யொடுவாய்மனத்தோ டெழுந்துமேதினியில்வந்த
ஐயனென்னரியர்க்கே யாவரிங்கீடேயாவார்.

38. நாட்களையெல்லாம்வீணாய் நடத்தினின்னருட்கழற்கே
யாட்படவறியாவெங்க ளஞ்ஞானமூலமெல்லாந்
தூட்படச்செய்தவுன்றன் தூய்மைக்கேயிடமாய்நின்ற
வாட்படைமாண்புதன்னை வழுத்தநாவெவர்க்குமில்லை.

39. பலபலகோடி நூல்கள் படிக்கினும்பார்த்திடாத
தலமதுகாட்டியந்தத் தலத்திற்குத்தலைவனாக்கி
நலமதுகொடுக்கவென்றே நானுமனுருவந்தாங்கி
யுலகினிலெழுந்தநாதற் கொப்பிடவொருவரில்லை.

40. நின்னருள்நிலைமையெல்லாம் நீயாகிக்காண்பதல்லால்
நின்னருளன்றிக்காண நிலைக்குமோநிலைத்திடாது
நின்னடிக்கடிமையாகி. நீநின்றநிலையைக்கண்டு
நின்னுடனேகமானால் நின்னருள்நிலைமையாவார்.

41. சத்தியஞானானந்த சாச்வதரூபமிங்குச்
சத்தியஞானந்தன்னைச் சத்தியமடியார்க்கீயச்
சத்தியத்தோடுதோன்றிச் சத்தியமொழியைச்சாற்றிச்
சத்தியமாகவன்பர் தம்முடன்லயித்ததன்றே.

42. நீநின்றநிலையையானும் நீயாகிக்கண்டதல்லால்
நீநின்றநிலைமைகாணா நினையலாலாவதுண்டோ
நீயளித்திட்டசூக்ஷமம் நீயறிவித்தாலன்றி
நீயடைந்திட்டநாட்டில் நீயேயானுவதாமோ.

43. எனக்குநீயளித்தபேற்றை யெவரடைந்திட்டாரிங்குத்
தனக்கொன்றுமில்லாநீதான் தவத்தினையுடையோர்போல
வனப்புளவடிவந்தாங்கி மானிடர்முன்னந்தோன்றி
யெனக்களியுடலமாதி யென்றுகைதாழ்த்திட்டாயே.

44. கிளிமுகனாதியார்க்குக் கிடைத்திட்டபேரானந்தம
எளிதினிலெனக்கமைத்த வியல்பினை நினைக்குந்தோறுங்
களிதனிலாழ்ந்துநெஞ்சங் கருணைதன்செயலையெண்ணி
வெளிதனைக்கண்டுமேலே விரைவுடன்சென்றதின்னும்.

45. வானுக்குமேலேசென்று வளர்பெறுமானந்தத்தைத்
தானெனவறிந்தப்பாலே தன்பெருவினைகளோய்ந்து
கோனொடுதானுமின்றிக் கொண்டதோர்கருமமற்றுப்
பானுவைப்போலவெங்கும் பரவெளியாயிற்றன்றே.

46. என்னுளமாவின்மூலமெனதுளங்குடிபுகுந்த
அன்னவனீசனாவி னந்தமாகரணம்நான்குந்
தன்னவன்சீடராவார் தருமொழிமௌனமாகும்
பின்னெழும்விபரீதம்போய்ப் பூரணமானதெங்கும்.

47. சூரியனொளியைநோக்கிச் சகந்தனைப்பார்க்குங்காலைச்
சூரியனொளியினாலே சகமதுதோன்றமாட்டா

தாரியனருளைப்பெற்றே யகண்டமாய்நின்றவன்பர்க்
காரியனருளினாலே யகிலமுமகண்டமாமே.

48. குருவெனவருவதாரோ கொடுப்பதுமவர்க்கிங்கேதோ
தருவதுசுமையோவென்னோ தரித்திடநமக்குமாமோ
பருவமுமடைந்துளோமோ பலிக்குமோர்வெனுமெங்கட்கு
வருவதுந்தருவதும்முன் அறிவன்றியாகாதென்றான்.

49. எனையன்றிக்குருவுமில்லை குருவன்றியானுமில்லை
எனையன்றிக்காண்பதற்கே யிருக்கின்றதேதுமில்லை
எனையுமேதானாய்ச்செய்திட் டென்னுளங்குடிபுகுந்தே
எனையெனக்களித்தவைய னென்னுடன்யானாய்நின்றான்.

50. கண்ணன்றியுலகினுள்ள காட்சிகள்காண்பதில்லை
மண்ணன்றிமாந்தர்கட்கு மாவிளைபோகமில்லை
விண்ணன்றியெவையெவைக்கு மேவுதற்கிடமுமில்லை
என்னன்றிக்காண்பதற்கே யிருக்கின்றதணுவுமில்லை.

51. தனித்திருந்தருளைநோக்கிற் றழைத்திடும்பேரானந்தங்
கணித்திடவெவராலாமோ கேட்பவர்க்குரைக்கப்போமோ
தனித்திருந்தறிவதன்றிச் சமர்த்தினாலறியப்போமோ
தனித்தவர்ஜனித்திடாத தன்மையைப்பெற்றுய்வாரே.

52. கண்ணதுவிருந்தும்பாரா காதுகளிருந்துங்கேளா
எண்ணமுமிருந்துநாடா இருகையுமேவல்செய்யா
பன்னுநாமொழியுஞ்சொல்லா பாதங்கள்நடந்துசெல்லா
தன்னிலையடைந்துநிற்றல் ஸமாதியின்திறமிதாகும்.

53. ஆரியனருளிச்செய்த வகண்டமாலக்ஷ்யந்தன்னிற்
றேறியமனதைநாட்டிச் செய்யவேறொன்றுமின்றிக்
கூறியலக்ஷ்யந்தன்னைக் கூடிப்பின்னதுவுமின்றி
யேறித்தன்னானந்தத்தி லிருப்பவர்ஸமாதியாளர்.

54. என்மனமடைந்தபேற்றை யென்மனமறிவதன்றி
என்மனமடைந்தவின்ப மின்னதென்றுரைக்கவல்லேன்
கன்மனமுடையரேனுங் கண்டதோரனுபவத்தைப்
பின்னருக்குரைத்தப்பேற்றைப் பொருத்திடாதிருப்பரோதான்.

55. தள்ளிடப்போகாவின்பச் சமாதியின்மகிமைதன்னைச்
சொல்லிடத்துணிந்துநின்றுஞ் சொல்லவோதெரியவில்லை
அள்ளினுமணுவுங்குன்றா தடைந்தவர்க்கேதிகட்டா
தெல்லோருஞ்சேரவாரீ ரித்நிலையேகுதற்கே.

56. சென்மங்கள்கோடிகோடி தேடியுமடையமாட்டாத்
தன்மையையடைவதென்றாற் சகசமாய்க்கிட்டுமோதான்
முன்செய்தபுண்ணியத்தால் முற்றுமேயன்றிவேறு
கன்மங்கள்கொடுக்குமென்று கனவிலும்நினைத்திடீரே.

57. திரைகடல்நதிகளாடித் திருத்தலமெல்லாமோடிக்
குறையறத்தெரிசித்தாறிக் கோதிலாப்பத்திமீறி
மறைமுடிவறிந்துதேறி மாசிலாமார்க்கமேறிப்
புரையறச்செய்தார்க்கன்றோ புனிதநின்னருள்தானெய்தும்.

58. தணிக்கப்படாதமாயை தன்வெயிற்பட்டவன்பர்
கணிக்கப்படாதவுன்றன் கருணையாம்நிழலிற்புக்குச்
சனிக்கப்படாதமோக்ஷத் தலத்தினைச்சென்றுசார்ந்து
துணிக்கப்படாதுன்னோடு சொரூபத்திலைக்யமானார்.

59. அன்பர்தம்பெருமையெல்லா மாரறிந்துரைக்கவல்லார்
தன்பெருஞானானந்த தத்துவாதீதவாழ்வை
என்பெருமானாமிங்ங னெழுந்துரையாடச்செய்து
துன்புறுமுலகைவிட்டுச் சுகித்திட்டாரமரர்நாண.

60. தன்னிடமெல்லாம்நிற்கத் தானெலாத்துள்ளும்நிற்க
முன்னிலைதன்மையின்றி மூதறிவாகநின்று
பின்னிலையேதுமில்லாப் பேதமற்றொன்றேயானார்
எந்நிலைநிற்கினுங்கா ணிருப்பதுமுக்திநாடே.

61. ஆசைவேருளத்திலோடி யாழ்ந்ததையறவேவெட்டி
ஆசையினிடமுங்காணா அதுபடர்தலமுந்தோணா
ஆசையென்றிந்நாண்மட்டு மறைத்திட்டபெயருங்காணாத்
தாசர்கட்கன்றோவுன்றன் தண்ணருள்வியந்தளிப்பாய்.

62. ஆசைவேரணுவுமில்லா அடியவருளத்தையெல்லாம்
ஆசைகட்ககப்படாத ஐயன்றன்னுளமாய்க்கொண்டான்
ஆசைகளற்றார்மேனி அவனுடலாகநின்றான்
ஆசைகளில்லார்சொல்லை அவனருட்சொல்லென்றேற்றான்.

63. ஆசைக்குவசப்படாத ஐயன்றனருளைவேண்டி
ஆசையின்மயக்கமெல்லா மகற்றினாரடியரெல்லாம்
ஆசையின்கரைகடந்த அன்னவர்க்கருளவேண்டி
ஆசையேயுருவந்தாங்கி யருண்மழைபொழிந்திட்டானே.

64. அபரோக்ஷஸாக்ஷாத்கார வநுபவானந்தவீட்டைச்
சுபவீக்ஷணத்தாற்றந்து த்வந்த்வங்களறவுகந்து

தபதேசமாகவந்து தடுத்தெனக்கருளளித்திட்
டுபதேசம்புரிந்தார்க்கிடிங் குரைத்திட்டொருவரில்லை.

65. ஞானிக்கோருருவமில்லை ஞானிக்கோருரையுமில்லை
ஞானிக்கோர்கருமமில்லை ஞானிக்கோர்கரையுமில்லை
ஞானிக்கோர்தருமமில்லை ஞானிக்கோர்தவமுமில்லை
ஞானியின்நாட்டமெல்லாம் ஞானமேயன்றியில்லை.

66. ஞானியின் ஆட்டமெல்லாம் ஞாலத்தாருய்வதற்கே
ஞானியின் ஓட்டமெல்லாம் ஞாலத்தார்செழிப்பதற்கே
ஞானியின்நாட்டமெல்லாம் ஞாலத்தார்பருவத்திற்கே
ஞானியின்தேட்டமெல்லாம் ஞாலத்தார்க்கருள்வதற்கே.

67. அன்பர்க்காயுரைப்பதன்றி யவனுக்கோர்மொழியுமில்லை
அன்பர்க்காய்த்தரிப்பதன்றி யவனுக்கோர்தரிப்புமில்லை
அன்பர்க்காய்நடப்பதன்றி யவனுக்கோர்நடப்புமில்லை
அன்பர்களன்றிவேறே யவனுக்கோர்விருப்புமில்லை.

68. அன்பர்களுளத்தையன்றி அவனுக்கோரிடமுமில்லை
அன்பர்கட்கருள்வதன்றி அவனுக்கோர்செயலுமில்லை
அன்பர்களுடலமன்றி அவனுக்கோருருவமில்லை
அன்பர்களவனையன்றி அன்னியமென்பதில்லை.

69. களைத்தழும்போதிலன்னை கற்பிக்கும்போதிற்றந்தை
சளைத்திருகைகள்சேர்ந்த சமயத்திலுடன்பிறந்தோன்
இளைத்திடும்போதிலுற்றார் இறைஞ்சிடும்போதிற்றெய்வம்
உளத்தினிலொன்றிநின்ற வொருவனுக்குற்றதன்மை.

70. விதிக்கின்றபோதிலாசான் விளையாடும்போதில்நேசன்
உதிக்கின்றபோதில்ஞானம் உரைக்கின்றபோதில்வேதம்
மதிப்பதற்கெட்டாச்செல்வம் மகிழ்தற்குமழலைவாய்ச்சேய்
துதிக்கின்றவன்பர்க்கையன் தோன்றியவாறிவ்வாறே.

71. வேண்டுமென்றிந்நாண்மட்டும் விரும்பியநெஞ்சந்தன்னை
வேண்டுதற்கொன்றிலாத விமலமாமறிவுதோன்றி
ஆண்டுகொண்டதுவேதானு யகம்புறமான பின்பு
வேண்டுவதொன்றுமில்லை வேண்டாததேதுமில்லை.

72. வேண்டுவதுன்னையன்றி வேண்டினதொன்றுமில்லை
வேண்டுவதிருக்குமென்னின் வேண்டுமென்றளித்திருப்பாய்
வேண்டுமென்றிச்சையெல்லாம் வீழ்ந்திடச்செய்ததன்றி
வேண்டிடச்செய்ததில்லை வேண்டுவதிங்குமில்லை.

(இன்னும் வரும்.)

# THE LION-CAT IMAGE OF VISHNU.

(A *New Archealogical Discovery.*)—The Evolution of Form.

## கேசரி-மார்ஜாலியவதாரம்.

(விக்ரஹ ஆராதனைமர்மம்.)

பம்பாய் இராஜதானியில் "ஆர்க்கியாலாஜீ" டிபார்ட்மெண்டுத் தலைவரான மிஸ்டர் ஜி. ஆர். பந்தர்க்கர் அவர்கள் பெடம்பூர் ஜமீன்தாரியிலுள்ள ஒரு ஊரில் நரசிம்மநாத ஸ்வாமி கோவிலில், சிம்மத்தின் உடலும், மார்ஜாலி (பூனை)யின் தலையுமுள்ள ஒரு பழையவிக்ரகமிருக்கக்கண்டு அது விஷ்ணுவின் ஓர் அவதாரத்தைக் குறிக்கும் அபூர்வ விக்ரஹமாமென்று ஆராய்ந்து தேர்ந்திருக்கிறார். இதன்மேல் பம்பாயில் பிரசுரமாகும் "டைம்ஸ் ஆவ் இந்தியா" என்னும் ஆங்கிலேயப் பத்திரிகை மஹாவிஷ்ணுவின் அவதாரத்தை விளக்கும் இந்தப்பூர்விக விக்ரஹத்தின் கருத்து இன்னதென்று உணர்வதற்கான உளவு தெரியாவிட்டாலும், அதற்கு ஒரு விதத்தில் அருத்தம் செய்யத்துணிந்து, "பூர்வத்தில் ப்ளேக் என்னும் கொள்ளை நோய் தோன்றியிருக்கும். அந்தக் கொள்ளைநோய் பரவாதபடி இப்பொழுது டாக்டர்கள் சொல்வதுபோல் அப்பொழுதும் எலிகளை நாசம் செய்யவேண்டியிருந்திருக்கும்: அதற்காக நரஸிம்மாவதாரம் கொண்ட விஷ்ணுவானவர் பூனைவடிவங்கொண்டு எலிகளை நாசம் செய்திருப்பர் என்று ஒருவிதமான புரளிக்கதையைக் கட்டிவிட்டு விக்ரஹ ஆராதனையின் மர்மம் உணராமல் பிதற்றுகிறது.

விக்ரஹம் என்றாலும் உருவம் என்றாலும் ரூபம் என்றாலும் ஒன்று. சாக்ஷாத் பிரம்மத்தை "அகண்டானந்த விக்ரஹ:" என்று சுருதி துதிக்கிறது. அப்படியென்றால் "அகண்டானந்த ஸ்வரூபமே தன் திருவுருவாகக் கொண்டவர் கடவுள்" என்று அர்த்தமேயன்றிவேறல்ல. அகண்டானந்தத்தின் ஸ்வரூபம் அருவமேயன்றி உருவமல்ல. உண்மையில் உள்ளபடி ஸ்வாநுபவத்தில் பார்த்தால் ஸ்வரூபமெல்லாம், உருவம் அருவத்தில் கரைந்து காணும் அவசரத்தில் தோன்றுவதன்றி வேறல்ல. இந்த நாமரூபப் பிரபஞ்சமெல்லாம் நாதவிந்து ரூபமாயுள்ள தத்துவச் சேர்க்கையால் ப்ரவிர்த்தித்து உண்டானது. அப்படியுண்டான இந்த நாம ரூபப் பிரபஞ்சத்தை 'தாரணத்தியான சமாதி' முறைப்படி யோகஸம்யமத்திலிருந்து பார்த்தால், நாம ரூபமெல்லாம் (காரியம் காரணத்தில் ஒடுங்கும் லயக்கிரமத்தை அநுசரித்து) நழுவிப்போய், எல்லாம் காமரூபமாய் விளங்கும். காமம் என்றால் அன்பு. அது விஷயப்பற்றுள்ளதாகின் ஆசை யென்று பெயர் பெறும். ஆசை பந்தத்தைக்கொடுக்கும். அன்பு பந்தத்திலிருந்து விடுவிக்கும்; அதாவது மோக்ஷத்தைக்கொடுக்கும். நாமரூப பிரபஞ்சத்தை யோகஸம்யமத்தில் காமரூபமாய்ப் பார்க்கும்பொழுது த்வைதபாவனை வாஸனையற்றுப் போகாத யோகியின் திருஷ்டிக்கு 'காதலன்-காதலி' ரூபமாய் விளங்கும். அதையே காமேசுவரர், காமேசுவரி யென்று சொல்லி விக்ரஹாராதனை முறையில் வணங்குவது. காமேசுவரர், காமேசுவரியை தத்துவ தரிசனம்கண்டு தேறிய தத்துவஞானியான யோகி பின்

னும் யோகஸம்யமத்திலிருந்து யோகதிருஷ்டியில் காணும்போது அன்பின் அரு-உரு ஆகிய இதுவே காமேசுவரர், காமேசுவரியின் உண்மையான ஸ்வரூபமென்று உள்ளத்துணர்ச்சியால் உணர்ந்து கொள்வான். அன்பு ஒன்றேயாக அதற்கு 'அரு' வென்றும் 'உரு' வென்றும் இரு வித தர்சனத்தன்மையுண்டானதெப்படி யென்று ஆராய்ந்தால் "அகண்டானந்த விக்ரஹமாய்" நிச்சலமாய், நிர்மலமாய், நிராகாரமாய் விளங்கும் "ஏகமேவாத்வதீயம்" என்னும் சுருதி வாக்கின் பொருளாய் விளங்கும் அத்வைதப்பொருள் லீலா விநோதார்த்தம் ஜகத் சிருஷ்டி முதலான ஐந்தொழிலை யியற்றக்கருதின பொழுது அந்த அத்வைத வஸ்து "தானே தானாயிருந்து தன்மயமான தன் சாயையைப் பார்த்தது!" அந்தப் பார்வையினாலுண்டான அறிவானும்-அறிபொருளுமே (Subject & Object) காமேசுவரர்-காமேசுவரி என்று சொல்லும் ஆனந்த விக்ரஹங்களாம். அருவே உருவாயமர்ந்து அருவத்தால் உருவத்தைப் பார்க்கும் பொழுது காண்பான்-காக்ஷி-காண்பொருள் என்கிற திரிபுடியுண்டாகிறது. இந்தத்திரிபுடி ரூபமே ஜகத்காரணம். இப்படி ஜகத்காரணமாயிருக்குமவனே ஜகத்காரணன் என்றும் ஸ்ரீமந் நாராயணன் என்றும், மஹாவிஷ்ணுவென்றும், ஆதிபராசக்தியென்றும், சித்சக்தியென்றும் பலவாறு பெரியோர்களால் தொழுது வணங்கப்படுகின்றனன். இவன் ஆகாசரூபி. ப்ரவிர்த்தி காலத்தில் ஆணாகவும் (தன்னைக்கொடுப்பவனாகவும்), நிவர்த்தி காலத்தில் பெண்ணாகவும் (தன்னையழிக்கும் சதியாகவும்) விளங்குவன். ஆண்பாலில் அவனைச் சொன்னாலும் அவனுக்கு உண்மையில் பால் வேற்றுமையில்லை. அவன், அவள், அது என்னும் மூன்றுக்கும் பொதுவாய் மூன்றிலும் அந்தர்யாமியாயிருப்பவன். இவனே சக்திஸ்வரூபம். 'விஷ்ணு' என்றால் எங்கும் பரவும் தன்மையுள்ளது என்று பொருள்படும். ஆகாசரூபியாய் அந்தர்யாமியாயிருக்கப்பட்ட மஹாவிஷ்ணு அவதாரமானார் என்றால், விலக்ஷணமான பொருள் லோகஸம்ரக்ஷணார்த்தம் லக்ஷணமாகத்தோன்றிற்று என்று அர்த்தம். விலக்ஷணமான பொருள் லக்ஷணமாகத்தோன்றிற்றென்றால், இன்ன லக்ஷணம் தான் அதற்கு அமையும் இன்னது அமையாது என்றில்லை. சிருஷ்டிஸ்திதி ஸம்ஹார திரோபவானுக்ரகசக்தியாம் ஐந்தொழிற் கர்த்தாவாம் அந்த சக்தி இப்படித்தோற்றும் இப்படித்தோற்றாது என்று சொல்லக்கூடாது. பெரியோர்கள் இந்த சக்தியின் தோற்றமும் ஒடுக்கமும் தங்களுக்குத்தோன்றி மறைந்த முறைமையை, அறியாத ஜனங்கள் பக்தி சிரத்தையால் நம்பி நல்வழிப் பட்டுய்யட்டுமென்று அனந்தம் விக்ரஹங்களாக அமைத்துள்ளார். இந்த விக்ரஹங்கள் எல்லாம் மனோசக்திகளாதலால், மனோசக்தியால் இன்னது தான் ஆகும் இன்னது ஆகாதென்று சொல்லமுடியாது. உண்மையாக உள்ளபடி தன்னையறிந்து தேஜோமயமான மனோசக்தி ஆகாசத்தைக்கொண்டு எல்லாவற்றையும் இயற்றுவிக்கும். ஐந்தொழிலும் புரியும் சக்தி யிதற்குண்டு. இதை "அநாஹதஸ்ய ஸப்தஸ்ய" என்னும் சுருதி வாக்கில் காணலாம். அநாஹதமாகிய ஹிருதய குகைக்குள்ளே ஒரு சப்தமிருக்கிறது; அந்த சப்தத்துக்குள்ளே ஒரு த்வனியிருக்கிறது; அந்தத் த்வனியினுள்ளே ஒரு ஜோதியிருக்கிறது; அந்த ஜோதிக்குள்ளே (தேஜோமய) மனமிருக்கிறது; அந்த தேஜோமய மனஸ்தான் "சிருஷ்டி-ஸ்திதி-வ்யஸன-கர்மக்ரித்"— சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹார காரியங்களைச்செய்கிறது. இப்படிப்பட்ட மனம் லயப்பட்டால் (செயலற்று ஒடுங்கினால்), அது லயப்பட்ட இடத்திலுள்ளது எதுவோ அது தான் "விஷ்ணு" என்றும் "பரமபதம்" என்றும் சொல்வது.

விஷ்ணு நரஸிம்மாவதாரம் எடுத்தபொழுது ஸிம்மத்தைப்போல் உக்ரமான தலையும் (புத்தி வன்மையும்) மனிதனைப்போல் இளகின ஹிருதயமும் உடையவராயிருந்தார். உக்கிரச்செய்கை செய்ய அவதாரமானாலும் அந்த உக்கிரச்செய்கையாம் ஸம்ஹாரத்தொழிலுக்கு ஆதாரமாய், அஸ்திவாரமாயிருப்பது கருணை யென்றுகாட்ட ஸிம்மத்தின் தலையும் மனிதன் உடலும் அமைந்த ரூபம்பெற்றார். அப்படியே "கேசரி—மார்ஜாலி," விக்ரஹ ரூபத்தை யோக விதிப்படி தத்வதரிசனம்செய்து அந்த அவதாரத்தின் மகிமையைச்சொல்ல வேண்டுமென்று அந்த தேவதாஸ்வரூபத்தையே திரியாகாரமாயிருந்து கேட்டால், அது தக்கபடி சரியான விடைசொல்லும். ஸிம்மத்தைப்போல் அஞ்சாத நெஞ்சும் அயர்ந்துபோகாத ஹிருதயமும் (வீரியமும் அல்லது தைரியமும்) படைத்தவராயிருந்தும் அவர் பஞ்சைவேஷம் போட்டுப்பரதை போலிருந்தும் அனுக்ரகிப்பார் என்பது தத்வார்த்தமாம். கபடநாடக சூத்ரதாரியான அவருடைய மாயாசக்தியின் மகிமை விளங்க மார்ஜாலி(பூனை)யின் தலையை யுடைய ஸிம்ம ஸ்வரூபம் அவருக்குத்திருவுருவாக அமையப்பெற்றதென்பதே உண்மையான உள்ளர்த்தமாம்.

இத்தேசத்தில் இப்பொழுது காலம் கெட்டு, கவர்ன்மெண்டார், தர்மாதர்மமென்பதை மறந்து பிரஜைகளைக்கொடுமையாக நடத்தத் துணிந்திருக்கும் காலத்தில், நம்மவர்கள் இந்தக்கேசரி-மார்ஜாலி விக்ரஹ ஸ்வரூபத்தைச்சிந்தித்து உபாஸித்து வந்தால், கபடநாடக ஸூத்ரதாரியான அவன் நம்பினோரைக்கைவிடாது காப்பாற்றிக் கரையேற்றுவான்-என்பதே நாமுணரத்தக்க நீதி. ஸிம்மத்தைச்சின்னமாயுடைய நமது அரசர் மார்ஜாலி வேஷம் போட்டுச் சூதுவாது செய்தாலும் ஸ்ரீமஹாவிஷ்ணுவும் இந்த ரூபமெடுத்திருக்கிறாராதலால் இத்தனை மார்ஜாலத்திற்கும் அடியில் ஸிம்மத்தின் ஹிருதயமாகிய ராஜகம்பீரம் அவர்களைவிட்டுப் போகவில்லையென்றுன்னி "தர்மமே ஜயம்" என்பதில் முழுநம்பிக்கை வைத்துழைத்து வந்தால், மார்ஜாலசிங்கத்தின் கையிலகப்பட்டும் நாம் கடைத்தேறி உய்யலாம் என்று நமது யதார்த்தபுத்தியில் நம்பிக்கைவைத்து பக்தி சிரத்தையோடுழைத்து வரக்கடவோம் என்பதும் ஒரு உண்மையான அர்த்தமாம். "தெரிபொருளாம் என்னைப்பற்றி விசாரம் வேண்டாம்; தெரிவானும் அகத்துள ஆனந்தமூர்த்தி அடித்தாலும் அணைத்தாலும் அது நன்மைக்கேயாகும்" என்பதை உறுதியாகக்கொள்ளவேண்டும்.

ஓம் தத்ஸத்.

---

ஓம் ஸ்ரீமௌனராஜகுருப்யோநம:

## மிருகசீர்ஷன் கண்டகனவு.

அல்லது

### ஸ்வர்ணஸ்பர்சம்.

(சிறுவருக்கான கதை.)

I

"நம்முடைய வாழ்வானது, சத்துருக்களால் தன் ராஜ்யத்தை விட்டுத்துரத்தப்பட்ட ஒரு சக்கிரவர்த்தி, மறுபடி தன் ஸைந்யங்கள் முழுவதையும் சேர்த்துக்கொண்டு ஒரே மூச்சில் தன் சத்துருக்களை நாசம்செய்து தன் ஸிம்மாஸனத்தில் நேராகபோய் உட்காராமல், ஒவ்வொரு அடி நிலமாகத் தன் ராஜ்ய முழுவதையும் விலைக்கு வாங்குகிற வியாபாரத்தி லிறங்கியது போலிருக்கிறது."

—எமர்ஸன்

---

முன்னொரு காலத்தில் மிருகசீர்ஷன் என்னுமொரு சக்ரவர்த்தி இருந்தான் அவனுக்கு வெகுநாள் குழந்தை யில்லாதிருந்து ஒரு

பெண் பிறந்தது. குழந்தை பிறக்கும்போதே தங்கக் கொடிபோ லிருந்தமையால் அதற்கு ஸ்வர்ணலேகை என்று பெயரிட்டு வெகு அருமையாய் வளர்த்து வந்தார்கள். மிருகசீர்ஷனும் தன் பெண்ணை எப்பொழுதும் தன்னோடு கூடவே வைத்துக்கொண்டு சீராட்டி வந்தான். கொஞ்ச நாளைக்கெல்லாம் குழந்தையின் தாயும் இறந்துபோய் விட்டமையால் அக்குழந்தை தகப்பனிடத்திலேயே வளர்ந்துவந்தாள். ராஜாங்கம் செய்யும் கொலு மண்டபத்திலும் சரி படுக்கையிலும் சரி, குழந்தை தகப்பன் பக்கத்திலேயே இருப்பாள். சில துஷ்டப்பிள்ளைகளைப் போல் தன் தகப்பன் அலுவலாயிருக்கும்பொழுது ஸ்வர்ணலேகை தொந்திரவு செய்திருக்கும் பக்ஷத்தில் அவளைத் தன்னோடு வைத்துக்கொண்டிருக்க மிருகசீர்ஷன் இஷ்டப்பட்டிருக்க மாட்டான். ஆனால் ஸ்வர்ணலேகை எவ்வளவு சாதுவாயிருந்தாளோ அவ்வளவு புத்திசாலியாயு மிருந்தாள். தகப்பன் முகத்தைக் கண்டே அவன் மனதிலிருப்பதை ஊகிப்பாள். அவனாக இவளைத் திரும்பிப்பார்த்தா லொழிய இவளாக அவனைக் கூப்பிடமாட்டாள்.

மிருகசீர்ஷனுக்கு வயது ஆக ஆகப் பணத்தாசை பெருத்தது. அவன்கிரீடத்தில் அவனுக்கிருந்த மதிப்பெல்லாம் அது தங்கத்தினால் வேலை செய்யப்பட்டிருந்ததற்காகத்தான். என்றைக்காவது சாயந்திர வெயிலில் மேகங்கள் தங்க நிறமாகத் தோன்றினால், அவை முழுவதும் நிஜத் தங்கமாகவே உருகி தன் பணப்பெட்டியில் வந்து விழலாகாதா என்று வருந்துவான். ஆனால் அவன் மனதில் தான் எல்லா வஸ்துக்களையும் விடத் தங்கத்தையே மேலாக விரும்புவதாக நினைத்துக் கொண்டிருந்த போதிலும் யதார்த்தத்தில் அவன் தன்னையறியாமல் தன் மகள் ஸ்வர்ணலேகையினிடத்தில் பூர்ணபக்ஷம் வைத்திருந்தான். அப்பேர்ப்பட்ட மகளைக் கூடத் தனக்கு மிகுந்த சந்தோஷமுண்டான வேளையில் கொண்டாடும் பொழுது "ஸ்வர்ணலேகை" என்கிற பெயர் உனக்கே தகுமென்றாவது அல்லது இடைக்கிடை தங்கம் கொடுத்தாலும் உனக் கீடாகாது" என்றாவது புகழ்வானே யொழிய தங்கத்தினுடைய உபமானம் வராமல் அவனுக்குப் புகழத்தெரியாது.

ஆனால் எவ்வளவுக் கெவ்வளவு தன் மகளிடத்தில் பிரியம் வைத்திருந்தானோ அவ்வளவுக் கவ்வளவு அவனுக்குப் பணத்தாசையும் அதிகரித்தது. ஏனெனில் தன் மகளுக்குத் தான் செய்யக்கூடிய பெரிய உபகாரப், இதுவரையில் உலகத்தில் யாருங் கண்டறியாத பொற்குவியலைச் சேர்த்து வைத்து அவளுக்குக் கொடுப்பது தான், என்று நினைத்தான். ஆதலால் தன் முழு சாமர்த்தியத்தையும் அந்த மஞ்சள் நிறமான மண்ணைச் சுரண்டி சேகரிப்பதிலேயே செலுத்தி தன் அந்திய காலத்தைக் கழித்து வந்தான். எப்பொழுதாவது காலை வேளையில் ஸ்வர்ணலேகை மந்தார புஷ்பங்களும் கொன்றை புஷ்பங்களும் பறித்து விளையாடக்கொண்டு வந்தால் "இதென்ன உபயோகமற்ற புஷ்பங்கள் குழந்தாய்! இவைகளின் இதழ்களெல்லாம் தங்கமாகவே யிருந்தால் பறித்தாலும் பிரயோசன முண்டு" என்பான்.

ஆனால் வயதான பிறகுதான் மிருகசீர்ஷனுக்கு இம்மாதிரி பணத்தாசை பிறந்ததே யொழிய, அதற்கு முன் யௌவன காலத்தில் புஷ்பங்களில் மிகுந்த ஆசைவைத்துப் பூந்தோட்டங்கள் ஏற்படுத்திப் பயிர்செய்து, தானே பூஞ்செடிகளுக்கெல்லாம் தண்ணீர் இறைத்து வந்தான். அநேக அரிதான புஷ்பச் செடிகளெல்லாம் எங்கெங்கிருந்தோ சம்பாதித்து வளர்த்து வைத்தான். அவைகளெல்லாம இப்பொழுது ஏராளமாய் விருத்தியாகி புஷ்பித்துக் கொண்டிருந்தன. ஆனால் இப்பொழுது என்றைக்காவது மிருகசீர்ஷன் பூந்தோட்டத்துக்குப் போனால், அங்கே புஷ்பித்திருக்கும் புஷ்பங்கள் என்ன விலைக்குப் போகும் என்று யோசிப்பானே யொழிய அவைகளின் அழகையாவது வாஸனையையாவது கண்டு ஆநந்திப்பதை மறந்து விட்டான். முன் நாளிலெல்லாம் மிருகசீர்ஷன் சங்கீதத்தில் பிரியம் வைத்திருந்த போதிலும் இப்பொழுது அவனுடைய காதுக்கு இனிய சங்கீதம் பவுன் காசுகளுடைய கலகலப்பான சப்தமே தவிர வேறொன்றும் இல்லை.

கடைசியில் மிருகசீர்ஷனுக்குத் தங்கமல்லாத வேறொரு பொருளையும் பார்க்கவாவது தொடவாவது பிரிய மில்லாமல் போய்விட்

டதி. ஆதலால் அவன் தனதரண்மனையின் கீழ் தன் புதைபல்களெல்லாம் சேர்த்து வைத்திருந்த ஒரு சுரங்கத்திலேயே பகல் பொழுது முழுமையும் போக்க ஆரம்பித்தான். தினந்தோறும் அதற்குள் நுழைந்து கதவைப் பின் புறமாகப் பூட்டிக்கொண்டு அந்த அறையின் இருட்டு மூலைகளில் ஒளித்து வைத்திருந்த பொக்கிஷங்களையெல்லாம், அதற்குள் காற்றும் வெளிச்சமும் வருவதற்காக ஏற்படுத்தியிருந்த ஒரு சாளரத்தின் வழியாகப் பிரகாசிக்கும் சூரிய கிரணத்தில் கொண்டுவந்து, அவைகளின் சுவர்ணமயமான காந்தியைக்கண்டு தனக்குள் தானே மகிழ்ந்து கொண்டிருப்பான். பவுன் காசுகள் நிறைந்த ஒரு பையை அவிழ்த்துக்கொட்டி அவைகளைக் கல கல வென்று தன்விரல்களால் துலாவி எண்ணிக்கொண்டிருப்பான். ஒருபடி நிறைய தங்கத்தூள்களைக் கொண்டுவந்து அதை நாழிகளால் அளந்து பார்ப்பான். அல்லது ஒரு தங்கக் கிண்ணியை அவ்வெளிச்சத்தில் கொண்டுவந்து அக்கிண்ணியின் பளபளப்பான மேற்புறத்தில் தன் முகம் கோணலாயும் பூகாகாரமாயும் தோன்றுவதைக்கண்டு நகைப்பான். சூரியனிடத்தில் அவன் வைத்திருந்த மதிப்புக்கூட அதனுடைய கிரணங்களின் உதவியின்றி தன் பொக்கிஷங்கள் பிரகாசிக்க மாட்டாமையினாற்றான். ஒவ்வொரு சமயம் ஒரு பவுனை நுனி விரலினால் சுண்டி எறிந்து அது 'கெல்' என்று சப்தித்துக்கொண்டு உயரப்போகையில் மேலேயே இன்னொரு பவுனை அதன் மேல்படும்படி வீட்டெறிவான். கடைசியில் தன் விரல்கள் மறைந்து போகும்படி தங்கத்தூள்களில் கையைப் புதைத்துக்கொண்டு "ஏ, மிருகசீர்ஷா, உன் பாக்கியமே பாக்கியம்" என்று பிதற்றிகொள்வான்.

II

மிருகசீர்ஷன் தன்னைத்தானே பாக்கியசாலி என்று சொல்லிக் கொண்டபோதிலும் வாஸ்தவத்தில் தான் இன்னும் அதிக பாக்கியத்தை அடையவில்லையே என்று வருந்தினான். உலகம் முழுவதையும் தனக்கு ஒரு பொக்கிஷசாலையாக ஏற்படுத்தி அதில் நிறைய பவுன் நாணயங்களை நிரப்பி அத்தனையும் தன்னுளுகைக்குள் வசப்படுத்திக் கொண்ட பிறகுதான் தனக்கு உண்மையான சுகம் கிடைக்குமென்று எண்ணினான். இப்பேர்ப்பட்ட எண்ணம் அவனுக்குண்டானது அதிசயமல்ல. மிருகசீர்ஷன் என்கிற பெயருக்கு "மாட்டுத்தலையன்" என்றர்த்தம். அவனுக்குக் காதும் நீளமாய் வளர்ந்திருக்கும் என்று கேள்வி. மாட்டுத்தலையனுக்கு மாட்டுப் புத்தியைத் தவிர வேறொன்றும் தோன்றாது. குழந்தைகளே, உங்களுக்குள் யாருக்காவது மாட்டுத்தலை இருக்கிறதா என்று தடவிப் பார்த்துக் கொள்ளுங்கள். இருந்தால் இப்பொழுது இளவயதிலேயே அதைத் தட்டிக் கொட்டி மனிதத் தலையாக்க முயலுங்கள். வயது சென்ற பிறகு எலும்புகளெல்லாம் முதிர்ந்து போய்விடுமாதலால் தலையைச் சீர்திருத்த முடியாது.

ஆனல் மிருகசீர்ஷனுடைய எண்ணம் நிறைவேறுவதற்குள் அவனுக்கு ஒரு ஆபத்து நேர்ந்தது. அவனுடைய சிற்றரசர்களில் ஒருவன் இவன் ஏராளமாய் பொன் சேர்த்து வைத்திருக்கிறனென்று கேள்விப்பட்டு பலத்த சைந்நியத்தோடு திடீரென்று படையெடுத்து வந்து இரவில் எல்லாரும் தூங்குகையில் அரண்மனைக்குள் புகுந்து மிருகசீர்ஷனைக் கைதியாகப்பிடித்துக் கொண்டான். மிருகசீர்ஷனுக்குப் பணத்தாசை பிடித்த பிறகு தன் சேவகர்களுக்கும் சிப்பந்திகளுக்கும் வழக்கமாய் கொடுத்துக்கொண்டு வந்த வெகுமதிகளை எல்லாம் நிறுத்தி விட்டான். இதனல் வெகுபேர்களுக்கு இவன்மேல் விரோதமுண்டாகி, இவனுடைய அரண்மனைக் காவலாளர்களில் சிலர் திருட்டு யோசனைசெய்து கொண்டு, படையெடுத்து வந்த சிற்றரசனுக்குத் தாங்கள் அரண்மனைக்குள் நுழைவதற்கு வேண்டிய உதவி செய்வதாக ஏற்பாடுசெய்து, அப்படியே நிறைவேற்றியும் விட்டார்கள். ஆனல் மிருகசீர்ஷன் பொக்கிஷம் வைத்திருந்த சுரங்கம் கண்ணுக்குப் புலப்படாமல் தரையோடு தரைபாக மறைந்திருந்தமையால் அதை ஒருவராலும் கண்டு பிடிக்க முடியவில்லை. படையெடுத்து வந்த சிற்றரசன் மிருகசீர்ஷனைப்பார்த்துத் தன் பொக்கிஷச்சாலையிருக்கு மிடத்தையும் அதன் சாவியையும் காண்பிக்கும்படி கேட்டான். தன்னைக் கொன்றாலுங் கூட அவைகளைக் காண்பிக்க மாட்டேனென்று மிருகசீர்ஷன் மறுத்து விட்டான். ஆனல் தனக்குப்பாதி

ராஜ்யத்தைத் திருப்பிக் கொடுக்கும் பக்ஷத்தில் தன பொக்கிஷ முழுவதையும் அச்சிற்றரசனிடத்தில் கொடுத்து விடுவதாக மிருகசீர்ஷன் ஒப்புக்கொண்டான்.

மிருகசீர்ஷன் நடந்த மண்ணை மிதித்ததனால் தானோ என்னவோ அச்சிற்றரசனுக்கும் பணத்தாசை பிடித்துவிட்டது. நீ சொல்லுகிறபடியே இந்த ராஜ்யத்தில் பாதியை உனக்குத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன். ஆனால் ஒரு அடி சதுரத்துக்கு ஒரு பவுனாக அதற்கு நீ விலைகொடுக்க வேண்டு" மென்றான். மிருகசீர்ஷன் அதற்கு சம்மதிக்காமையால் அவனையும் அவன் மகளையும் அப்படியே காட்டில் கொண்டுபோய் விட்டு விடும்படி அச்சிற்றரசன் உத்தரவு செய்தான். ஏனெனில், மிருகசீர்ஷனைக் கொன்று விடுவதனால் பொக்கிஷம் ஒருபோதும் கிடைக்கப் போகிறதில்லை. அவனை இம்மாதிரி காட்டில் விட்டு ஹிம்ஸித்தால் ஒருக்கால் கஷ்டம் பொறுக்க மாட்டாமல் தன் சொல்படி கேட்டாலும் கேட்பான் என்று அச்சிற்றரசனுக்குத் தோன்றிற்று. ஆகலால் அந்தப் பிரகாரமே மிருகசீர்ஷனும் ஸ்வர்ணலேகையும் காட்டில் கொண்டுபோய் விடப்பட்டார்கள்.

(இன்னும் வரும்.)

---

## "FREE FROM BONDS."

(*The Autobiograply of a Taluq Gumastah.*)

## *அவிழ்த்து விட்டகழுதை

(262-வது பக்கத்தொடர்ச்சி.)

இப்பொது என் தாயாரை நினைத்துப்பார்க்கையில் அவள் உபயோகமற்ற கழிசறையான எனக்கு உபகாரம் செய்யவந்த தேவதையென்று தோற்றுகிறது. உலகத்தில் எல்லா தாயார்களும் இப்படித்தானிருப்பார்களோ என்னவோ எனக்குத்தெரியாது. என் தகப்பனார் இறந்ததற்கு முன் நான் அவள் அழுது பார்த்ததில்லை. எப்பொழுதும் ஏதாவது பாடிக்கொண்டேயிருப்பாள். நான் எதற்காகவாவது வருத்தப்பட்டாலும் அல்லது அழுதாலும் உடனே ஏதாவது விகடமாகத்தேறுதல் சொல்லி என்னைப் பரிஹாஸம் செய்தே என்னைச் சிரிக்கச்செய்துவிடுவாள்.

ஒரு நாள் நான் கீழே இடறி விழுந்ததைப் பார்த்து அடுத்தவீட்டுப் பையன் சிரித்தான் என்று முறையிட்டேன். "அவன் அழுதால் உனக்கு திருப்தியாயிருக்குமா? அவன் விழாமல் நிற்பதைப் பார்த்து நீ சிரிக்கக்கூடாதா?" என்றாள்.

இன்னொருதடவை நான் மெட்றிகுலேஷன்வகுப்பில் படிக்கையில் ஒரு நாயிறறுக் கிழமையன்று வீட்டிலேயே ஒரு பிரசங்கம் எழுதிக்கொண்டு வரும்படி தமிழ் பண்டிதர் உத்திரவு செய்திருந்தார். விஷயம்: "வல்லவனுக்குப்புல்லுமாயுதம்" என்கிற பழமொழி. நான் வெகுநேரம் யோசித்துப் பார்த்தேன், என்னஎழுதுகிறதென்று தோன்றவில்லை. ஸ்ரீராமன் தர்ப்பையினால் காக்கையின்பேரில் அம்புதொடுத்த ஒரு உபமானம் தான் ஞாபகத்துக்கு வந்தது. ஆனால் ஒரு எளிய பக்ஷியின்பேரில் அம்புதொடுத்தவனை வல்லவனாகச் சொல்லலாமா என்று சந்தேகமுண்டாயிற்று. அப்படிப் பார்த்தால் காக்கைபிடிக்கிற குறவனுக்கு சோற்றுப் பருக்கை ஆயுதம் என்று சொல்லலாமா! அதனால் குறவன் வல்லவனாகி விடுவானா என்று யோசித்தேன். இதற்குள் என் தாயார் என்னை சாப்பிடக் கூப்பிட வந்தவள் என் பிரமித்துப்போய் விழிக்கிறாய் என்றாள். நான் எழுதவேண்டிய விஷயத்தைச்சொன்னேன். "உனக்கு வேறு ஒன்றுந்தோன்றாவிட்டால், 'வல்லவனாயிருப்பவன் புல்லைக் கண்டாலும், ஆயுதத்தைக் கண்டதுபோல் பயந்தோடிப்போவான்' என்று எழுதிவிட்டு சீக்கிரம் சாப்பிடவா" என்று

* தன்னையறிந்து தன் தொழிலில் பிரவேசிக்கும் மனுஷர் சக்தி தடையறியாது.

சொல்லிப் போய்விட்டாள். நானும் உடனே எப்படிப்பட்ட வித்வான்களிடத்தும் சொற்பிழை இருக்கலாம் என்றும் ஒளவையின் சொல்லில்கூட இப்படி விபரீதார்த்தம் செய்யும்படியான பிழைஇருக்கிறது என்றும் எங்கேயோ ஆரம்பித்து எங்கையோ முடித்தேன்.

என் தாயார் எழுதப்படிக்கத் தெரிந்தவளல்ல. சரித்திரங்கள் புராணங்கள் கீர்த்தனங்கள், வேடிக்கை கதைகள் இவைகளைக் கர்ண பரம்பரையாய்ப் பாடம் செய்திருந்தாள். முக்கியமாய் தினம் ஏதாவது ஒரு வேடிக்கையான கதை தவறாமல் சொல்லுவாள். ஆனால் சொல்லவேண்டிய சந்தர்ப்பம் நேர்ந்தால் மட்டும் அவளுக்கு சொல்லத்தெரியுமேயொழிய திடீரென்று ஒரு கதை சொல்லச்சொன்னால் அவளுக்கு ஞாபகத்துக்குவராது.

நான் நல்ல சாப்பாடில்லாமல் கஷ்டப்படுகிறேனென்று எனக்கு வாரந்தோறும் ஞாயிற்றுக்கிழமைகளில் ஏதாவது பக்ஷணங்கள் செய்து கொடுத்தனுப்புவாள். ஒரு தடவை எனக்கு எல்லாவற்றிலும் பிரியமான 'திரட்டுப்பால்' என்னும் இனிய பதார்த்தத்தைச் செய்து ஒரு புதிய தகரடப்பியில் அடைத்துக்கொடுத்தனுப்பினாள். அப்பொழுது எனக்குப் பதினுவயதிருக்கும். வழியில் வயதான ஒரு பிச்சைக்காரன் "ஐயோ, ரொம்ப பசியாயிருக்குது" என்று வயிற்றைத் தடவிக்கொண்டு பல்லையிளித்துக்கொண்டு என்னை வழிமறித்தான். அவனைப் பார்த்தால் பரிதாபமாயிருந்தது. அவனுக்குக் கொடுக்க என்னிடத்தில் காசு இல்லை. உடனே கர்ணனுக்குப் பிறகு கொடையாளி நான் தான் என்று காண்பிக்கும்பொருட்டு கர்வந்தலைமட்டங்கொண்டு, புதிதாய்க்கட்ட ஆரம்பிக்கும் தர்மசத்திரத்தின் அஸ்திபாரத்தில் தன் பெயர் வெட்டிய கருங்கல்லைத் தன் கையால் தொட்டுவைக்கும் தர்மகர்த்தாவுக்குள்ள பெருமையோடு சுத்த சிறுபிள்ளைத்தனமாய் முன்பின் யோசியாமல் கையிலிருந்த திரட்டுப்பால் டப்பியை வெகு அமுத்தலாய் வீசி எறிந்தேன். அது அப்படியே அவன் தலையில் விழுந்து அவனுக்குக் கபாலமோக்ஷம் கொடுத்திருக்கலாகாதா என்று இப்பொழுது வருத்தப்படுகிறேன். ஏனெனில் அவன் முழுப்பாசாங்குக்காரன் என்று இப்பொழுது தெரிகிறது. அவன் டப்பியைக் கையிலேந்திக்கொண்டதும் அவன் முகத்திலிருந்த ஏழைமையும் பசியும் எங்கேயோ பறந்தோடி விட்டன. டப்பி நல்ல கனமாயிருந்தமையால் அது முழுவதும் பவுனுகை இருக்கும் என்று நினைத்தானே என்னவோ தெரியவில்லை! அவன் பல்லை யிளித்ததெல்லாம் இப்பொழுது முற்றிலும் சிரிப்பும் சந்தோஷமுமாக மாறிவிட்டது. வந்த சிரிப்பை அடக்கமாட்டாமல் திருட்டுத்தனமாய் சிரித்துக்கொண்டே போய்விட்டேன். டப்பியைத்திறந்ததும் மஞ்சள் களிமண், வெள்ளைக்களிமண், சிவப்புக்களிமண்களாகிய நாணயங்களுக்குப் பதிலாக, கமகமவென்று ஏலக்காய் வாதம்பருப்புகளுடைய வாசனையோடு தேன் நிறமாகத் தேன் கசிந்துகொண்டிருக்கும் திரட்டுப்பாலைப் பார்த்தவுடன், அதைத் தன் ஆயுள் பரியந்தம் நீடித்து இருக்கும்படி வைத்துக்கொண்டிருக்கவேண்டுமென்கிற ஆவலுண்டாகி, அதைக்கொஞ்சம் கொஞ்சமாய்ப்புசித்துக்கடைசியில் அது முற்றிலும் செலவழிந்துபோகிறதினத்தில் அதன்ருசி தன் நாவிலிருக்கும்பொழுதே தனக்கு மரணம் கிடைக்கவேண்டுமென்று அப்பிச்சைக்காரன் கடவுளை வேண்டிக்கொண்டிருப்பான் என்று முற்றிலும் நம்புகிறேன். கொஞ்சநேரம் கழித்து என் சுயபுத்தி திரும்பி வந்து, நான் செய்த அசட்டுத் தனத்தை உத்தேசித்து என் அருமைத் தாயாரிடத்தில் நன்றியறிவில்லாமற் போனதற்காக அழுதேன். அவள் அந்தப் பக்ஷணம் செய்வதற்காக நாலுநாளாக சிரமப்பட்டதையும், அதை அடுப்பில் வைத்துக் காய்ச்சிக் கிளறுகையில் அவள் முகத்திலிருந்த சந்தோஷத்தையும், அதை சரியான பதத்தில் அடுப்பை விட்டிறக்குவதற்காக அவள் காத்துக்கொண்டிருந்ததையும், அதை நான் சாப்பிட்டுப்பார்த்து அது எப்படியிருந்ததென்று அடுத்த தடவை அவளுக்குச் சொல்லுவேனென்று அவள் எதிர்பார்த்துக் கொண்டிருக்க, நான் அதைத்திறந்துகூடப்பாராமல், முன்பின்னறியாத போக்கிரிப்பயலிடத்தில் அத்தனையுங்கொட்டிக்கொடுத்து விட்டு ஏமாந்துபோனதை யறிந்தால் அவள் எவ்வளவு வருத்தப்படுவாள் என்பதையும் அடுத்த தடவை அவள்முகத்தைப் பார்க்க வெட்கமாயிருக்குமே என்பதையும் உணர்ந்து உள்ளமுருகி

இனி என் தாயாரையும் அந்தப் பிச்சைக்காரனையும் பாராமல் எங்கேயாவது ஓடி விட வேண்டுமென்று நினைத்தேன். "அறஞ்செய் விரும்பு" என்றெழுதியிருந்த புஸ்தகத்தைக் கிழித்து விட எண்ணங் கொண்டேன். ஔவையைக் கண்டால் அன்றைக்கு அடித்தேயிருப்பேன்.

இதனால் பிச்சை கேட்பவர்களுக்குக்கொடுக்கக் கூடாதென்று சொல்லவில்லை. என்னிடத்தில் பிறருக்குக்கொடுக்கும்படியாக அதிகமாக இல்லாவிட்டாலும், இருப்பதை எல்லாரோடும் பகுந்துகொள்வதில் எனக்கு மிக திருப்தி. என்னுடைய சிநேகிதர்களுக்குப் பிரியமான பதார்த்தம் இன்னதென்று அறிந்துகொண்டு அது எனக்ககப்பட்டபொழுது ஒருபங்கு அவர்களுக்கும் கொடுத்தனுப்புவேன். அவர்கள் அனுப்பினாலும் வாங்கிக்கொள்வேன். சில தாசில்தார்கள் புதிய கலெக்டர்துரைவந்தால் அவருக்குப் பிரியமான பதார்த்தங்கள் என்னவென்று 'குசினி'க்காரனைக் கேட்டறிந்து கொள்ளுவதுபோல், நான் யாரிடத்திலாவது புதிதாக சிநேகம்செய்தால், அவருக்கு இன்ன கறிகாய்கள் பிடிக்கும், இன்ன பக்ஷணங்கள், பழவகைகள் பிடிக்கும், இன்னபடங்களைப் புகழ்கிறார், இன்ன ராகத்திலோ கீர்த்தனத்திலோ விசேஷதிருப்தி, இன்ன கவிகளிடத்தில் பக்ஷபாதமாயிருக்கிறார், இன்ன சுலோகங்கள் அவருக்கு அழகாகப்படுகின்றன, இன்னநாடகத்தில் இன்ன ஆட்டக்காரன் இன்னவேஷம்போடுவதைப்பார்க்க விரும்புகிறார், எந்தத்தத்துவசாஸ்திரியின் கொள்கை அவருக்கு சரியாகத்தோன்றுகிறது, எந்த பக்தர்களிடத்தில் அபிமானம் வைக்கிறார், எந்த மஹாத்மாக்களைக்கொண்டாடுகிறார், எந்த இஷ்டதேவதையைப் பூசைசெய்கிறார் என்று அறிந்துகொண்ட பிறகுதான் அவரோடு தங்கு தடையில்லாமல் தாராளமாய்ப் பழகமுடியும். அவரோடு சிநேகம் செய்வதற்கு அவருடைய மனோபீஷ்டங்கள் என்னுடையவைதப்போலவே இருக்க வேண்டுமென்பது அவசியமில்லை. ஒன்றையும் ஒளிக்காமல் பூகஞ்சி செய்யாமலிருந்தால் போதும். என் மனதைப்போலவே அவர் மனமுமிருந்துவிட்டால் கேட்கவேண்டியதில்லை. எவனாவது தனக்குக் கத்தரிக்காய் எண்ணெய்க்கறி பிடிக்காது, இளநீர் இளந்தேங்காய் பிடிக்காது, பூசனிக்காய் மோர்க்குழம்பு பிடிக்காது, என்று சொல்வானானால் சாப்பாட்டுக்கு மேற்பட்ட விஷயங்களிலும் அவனுடைய புத்தி அப்படி அப்படிதானிருக்கும் என்று ஊகித்துக்கொள்வேன். பழவர்க்கங்கள் முதல் வேதாந்தம் வரையில் எனக்கு ருசியாயிருக்கிற பதார்த்தத்தைப் பிறருக்குக்கொடுத்து அவர்கள் மூலமாய் அதை இன்னொருதரம் அனுபவிப்பது என் சுவபாவம். ஆனால் கொடுப்பதற்கும் ஓரளவுண்டு. பரமசிவன் பத்மாசுரனிடத்திலும் பிரமதேவன் ராவணனிடத்திலும் கேட்டதைக் கொடுத்துவிட்டுத் திண்டாடினதுபோல் திண்டாடுவது முட்டாள்தனம். அது தேவர்களுக்குத் தகுமேயொழிய மனுஷியர்களுக்குத்தகாது. ஆதலால் ஏமாந்துபோகாமலிருக்க விரும்புகிறவன் எல்லாவற்றையும் கொடுத்துவிட்டாலும் தனக்கு மிகப்பிரியமான ஏதாவது ஒரு வஸ்துவில் தன் ஈகைக்குணத்தை நிறுத்திக் கொள்ள வேண்டும். பக்ஷணங்களில் நான் அப்படி நிறுத்திக்கொள்ளுகிற வஸ்து திரட்டுப்பால் ஒன்றுதான். அதையும் கொடுத்து விடுகிறதென்றால், நமக்கு நாவில் ருசியையும், கையில் பாகம்செய்யும் சாமர்த்தியத்தையும், உலகத்தில் பதார்த்தங்களையும் சிருஷ்டித்த கடவுளுக்குத்துரோகம் செய்வதாகும்.

(இன்னும்வரும்)

தாலூக்கா குமாஸ்தா.



பராதேவி துணை.

# THE SOUL IN SEARCH OF THE LIGHT THAT LIGHTETH ITS PATH.

## ஜீவாத்மா அந்தர்முகமாகி ஆராய்ச்சிசெய்து அறிவாகிய மணியை பரமாத்மாவிடம் சமர்ப்பித்தது.

(ஸ்வாநுபவச் செல்வியாம் ஆவுடையாரம்மாள் அருளிச்செய்தது.)

வேதாந்த-நோண்டிச்சிந்து.

(*From Sri R. S. Subbalakshmi Ammal.*)

1. சாந்தநரசிம்மர் பாதத்திலே நான்
சரணமென றனுதின மும்பணிந்தேன்
சரணமென்றே அடைந்தேன்—

2. பணிந்த பின்பென்னைப் பார்த்தார் தயாபரர்
பறந்ததே என்றன் கர்மமெல்லாம்
திரும்பியே வாராமல்—

3. தீர்த்தார் சென்மூத்தை கார்த்தார் கருணையால்
பார்த்தார் பச்சைமரத்தாணிபோலே
ஆத்தாள் உதரம்விட்டு மாத்தினரே—

4. மாற்றில்லாதமறு பொருளைக்கண்டு நான்
மனதுபுளகித மானேனே
மறந்தேன் சரீரந்தன்னை—

5. ஆனேன் ஒரு வடிவானேன் குருபாதம்
தானே வனுபிடி யானேனே
நானே நளினபாதாம்புஜத்தை—

6. பரிபக்குவ மாச்சுதென்று பக்ததயாபரர்
எத்தி முத்திதர நினைத்தாரே
பராசக்தியின் கிருபையினாலே—

7. உபநிஷத் வாக்கியம் பொறுக்கி என் செவிதன்னில்
உரைத்தார் தாரகத்தை வான்போல
நிரைத்தார் பூரணத்தை—

8. உரைத்த அக்ஷரம் பிடித்தேன் அரைக்ஷணம்
குடித்தேன் ஆனந்தக்களிப்பானேன்
மதர்த்தேன் மதகரி ஆனையைப்போல்—

9\. பவஸாகரத்தை குருசாதனத்தால்
அனுபாஸமாகவே கடந்தேனய்யா
ஒரு ஆவின்குளம்படிபோல்—

10\. ஸ்நானபானம் சந்தியாதி தர்ப்பணங்கள்
சந்ததமும் செய்துகொண்டு வந்தாலும்
பிர்ம்மம் சித்திக்கவில்லை ஐயா—

11\. ஆதி சேது காவேரி காசி முதலான
அறுபத்தாறுகோடி தீர்த்தங்களும்
ஆடிவந்தேன் ஆத்மாவைக்காணேன் ஐயா—

12\. முப்பத்துமுக்கோடி மூர்த்திகளையுங்கண்டு
மூக்காலும் வளையவந்து முட்டிக்குட்டிக்கொண்டாலும்
பிர்ம்மங்கிட்டவுமில்லை ஐயா—

13\. அஷ்டாங்கயோக சமாதியிலிருந்து
ஹடயோகத்தினாலே ஆராய்ந்தேன்
பிராணயாமத்திலுங்காணேன்—

14\. ஸ்தூல சூக்ஷ்மக் காரணாதிக்கோட்டையை
தும்பிபோலப் பறந்து நான் தேடினேனே
ஜெகதம்பிகை அருளினாலே—

15\. ஒருத்தராலேயும் பிரவேசிக்கக்கூடாத
உபநிஷத்தாகிய காட்டிற்குள்ளே
நானொருவனாய் ஊடாடி நுழைந்தேனையா—

16\. பற்பலசுருதிகள் ஸ்மிருதிகளாகிய
பிரவாகங்களு மங்கேவருகுதய்யா
மறுகரைகாணமுடியாமல்—

17\. வேதசாஸ்திரங்க ளாகின்றகொடுமுடி
மேகம்போலே யங்கேவளர்ந்துகொண்டு
வழிமேலே போகவுமெட்டவில்லை—

18\. அறுபத்துநாலு கலைகளாகின்ற
ஆனைகள்மலைபோல வருகுதய்யா
கால்வைத்திட இடமுமில்லை—

19\. ஜனனமரணமாகின்ற மலைப்பாம்பு
வழியிலே மரம்போல் கிடக்கின்றதே
அதைத்தாண்டிப் போகவுந் தெரியவில்லை—

20. ஸ்வர்க்கநரகமென்ற அல்பப்பிசாசுவந்து
அச்சப்படுத்துவதைக் கண்டு நான்
அலக்ஷ்பஞ்செய்தேனே!—

21. மனுவசனங்களாகின்ற பக்ஷிகள் வனத்திலே
வாசி பூசி என்று கத்திடவே
மனது சூஸ்திரவழி சுற்றிடவே—

22. பல புராணங்களாகின்ற வண்டுகள் வனத்திலே
பாடிப் பாடிச்செவியில் அடிக்கின்றதே
தேகம் பரவசந்தானுச்சே!—

23. தத்துவங்களான தொண்ணூற்றாறு கோடிகளும்
சன்ன பின்னலாய்ப் படர்ந்துகொண்டு
தலை சுற்றுகிறதே சற்றுந்தெரியாமல்—

24. அன்வய விதிரேகம்மாகின்ற மூங்கிற்
பண்ணைகள் வெகுவாய் வளர்ந்துகொண்டு
தலைசுற்றுகிறதே சற்றுந்தெரியாமல்—

25. இப்படிப்பட்ட வேதாந்தக்காட்டை
எப்படிநாமுங் கடப்போமென்று
ஏக்கமுந்தானுச்சே—

26. அறிவு நீதானென்று உளவுசொன்னார் குரு
அதுவே திருடமாகப் பிடித்துக்கொண்டு
நானடிமே லடிவைத்து ஆராய்ந்தேன்!

27. சத்சங்கமாகின்ற சத்துக்கள் வழியிலே
சகாயமாகவே கூடித்தையா
மனது சந்தோஷமுந்தானுச்சே!

28. வனத்து துர்ச்சங்கம் கடந்துபோகும்போது
வந்தாரே அங்கே மதவாதியர்கள்
வாதயுத்தம் தந்தாலே வழிவிடுவோ மென்றார்!

29. அடுத்தாரென்னையவாள் எதிர்த்தேன் அவாளைநான்
தொடுத்தேனே அத்வைத சரத்தினலே
துணித்தேன் அவாள்மதம் தூளி தூளியாய்—

30. ஆறுமதவாதிகளும் வாதுக்குத்தோர்த்து விட்டு
ஆருக்கும் சொல்லாமலே ஓடினாரே
அத்வைததிடஞ் சொல்லி ஜெயித்தேனையா—

31. பதபதார்த்த லக்ஷியார்த்த விசாரணை பண்ணிப்பண்ணி நான்
பையப்பைய வழி கடந்தேனே
நான் பண்ணினதபவினாலே—

32. சிரவணமனன நிதித்யாஸனமாகின்ற
சாதனங்களினால் வழிதாண்டி
தத்திப்பற்றி மெள்ளப்போகையிலே—

33. ஜீவனீஸ்வராளென்ற இரண்டு இராக்ஷதாள்
ஜனத்துடன் ஓடிவந்து எதிர்த்தார்களே
ஜயிக்க உபாயமுந்தெரியவில்லை!

34. சத்குருபாதத்து தூளியை சிரவிலே
சந்தோஷமாகவே நான் தரித்துக்கொண்டு
தள்ளினேன் ஸர்வசத்துராதியரை—

35. அகில உபாதிகளை மடிய அடித்துவிட்டு
ஆனந்த அம்புதியில் அமிழ்ந்தேனே
அகண்டமா யாகாசமாய் நிறைந்தேனே—

36. காலத்ரயங்களும் லோகத்ரயங்களும்
தேகத்ரயம் கவிசாகைகளும்
கங்கு கங்காகவே கரைந்ததையா—

37. அக்யானமாகின்ற காயத்துக்குள்ளே
விக்யான அக்கினி போய்விழுந்து
மிகவுந்தகிக்கத் தொடங்கிற்றையா—

38. பஞ்சகோசங்களும் பஞ்சவிஷயங்களும்
பஞ்சசக்தியும் அரக்கு மாளிகையும்
பஞ்சுகள்போலவே எரிந்ததையா—

39. ஷடூர்மி ஷட்விகாரம் ஷட்கோச மாகின்ற
சாவடிகளும் உப்பரிகையும்
சுகர்த்துத் தகனங்களாச்சுதையா—

40. ஆதித்தியன் முதலான ஐந்துப்ரகாசத்திற்கும்
அதிக்கிரமித்துக்கொண்டு ஜ்வலித்ததையா
பரமாத்மா தேஜஸ்ஸுடன்!

41. திடச்சித்தமாகவே சத்சங்கபலத்தால்
தேஜோமயமான ஆத்மாவை நான்
தன்னுக்குள்ளே கண்டு கொண்டேனையா!

42. முக்திபாகின்ற அம்மனைக்கண்டு நான்
முத்திரை கொடுத்து மணிவாங்கிக்கொண்டு
உத்தர திக்கில்வர நினைத்தேனையா!

43. சம்ஸாரமாகும் விருக்ஷச் சாகைக்கப்புகள் தன்னைச்
சடசடாமமாக நான் முறித்துவிட்டு
ஒரு தெருநினப்பாட்டையும் பாடிக்கொண்டு—

44. ஜனனமரணமென்ற சிந்துவைக்கடந்து நான்
திரும்பி வந்தேனையா இக்கரையில்!
ஜீவன்முக்தனைக்கண்டு சேதிசொன்னேனையா!

45. மட்டில்லாத வொரு ஆனந்தங்கொண்டு நான்
மப்புத்தட்டிக் கொக்கரித்துக்கொண்டு
வந்தேன் நான் உம்மிடத்தில்—

46. வந்தனம் உம்முடைய பாதத்திலே நான்
தந்தேனே ஆத்ம சூடாமணியை
அடைந்தேன் திருவடியை—

47. பக்தவத்ஸலா சரணமய்யா! பரமதயாளு சரணமய்யா!
லக்ஷ்மிகாந்தா சரணமய்யா! ஸ்ரீநரசிம்மா சரணமய்யா!
தவத்திற்கதிபா சரணமய்யா! சுவாமி வெங்கடேசா சரணமய்யா!
குணத்திற்கதிபா சரணமய்யா! குரு வெங்கடேசுவரி சரணமய்யா.

ஓம் தத்ஸத்.

## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.
## சீதா அல்லது இல்லற வாழ்க்கை.

### 18-வது அதிகாரம்.

காமேசுரய்யர் ஊருக்குப்போகும்போது ராஜத்துக்கு கிரகப்பிரவேசம் உடனே செய்துவிடவேண்டுமென்று சொல்லி கிருஷ்ணசாஸ்திரிகள் எல்லோரையும் தன் கூடவே புறப்படும்படி சொன்னார். அவர், 2 - 3 நாள் இருந்து கல்யாண கணக்குகளையெல்லாம் பார்த்து அனுப்பவேண்டியவர்களையெல்லாம் அனுப்பிவிட்டு வருவதாகச்சொன்னார். காமேசுரய்யர் சரிதானென்று சீக்கிரம் புறப்பட்டுவரும்படி சொல்லிவிட்டு நாராயண சாஸ்திரிகளையும் வெங்கலக்ஷ்மி அம்மாளையும் தன் கூடவே வரும்படிகேட்டுக்கொண்டார். வெங்கலக்ஷ்மி அம்மாள் சரிதானென்று ஒப்புக்கொண்டாள். பிறகு எல்லோரும் புறப்பட்டு பூவாசநல்லூர் போய்ச் சேர்ந்தார்கள். காமேசுரய்யர் கிரஹப்ரவேசத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் உடனே செய்தார். அதுவும் வெறும் கிரகப்ரவேசமாக இருக்கவில்லை. ஒரு கல்யாணம்போலவே இருந்தது. கிருஷ்ண சாஸ்திரிகள் அவர் தம்பி முதலானவர்கள் ஒரு மாசம் இருந்துவிட்டுப்போகும்படி காமேசுரய்யர் கேட்டுக்கொண்டார். வெங்கலக்ஷ்மி அம்மாள் அங்கே வந்ததில் ஒரு காரியத்தை உத்தேசித்திருந்தாள். முதலில் கிரகப்ரவேசத்துக்குப்போகிறதில்லையென்று தீர்மானித்தவள் காமேசுரய்யர் கட்டாயப் படுத்தவும் ஓர் காரியம் மனதில் தோன்றி அவள் உடனே புறப்பட்டாள். அடிக்கடி தன் புருஷனைக் கண்டு தனியாக அவரைக்கண்டித்துக்கொண்டே இருந்தாள். பிறகு ஆஷாடபூதி வெங்கிடராம சாஸ்திரிகள் போக்கிரி கிருஷ்ணசாமி

யன் எல்லாருமாகச்சேர்ந்து அடிக்கடி தனியாக ஏதோயோசனையெல்லாம் செய்தார்கள். கிருஷ்ண சாஸ்திரிகளுக்கு அந்த வூர்முழுவதும் உறவாதலால் அவரைவீட்டுக்கு வீடு அழைத்து விருந்துபோட்டார்கள். கடைசியில் ஒரு நாள் வெங்கிடராம சாஸ்திரிகள் வீட்டிலும் விருந்து நடந்தது. விருந்துக்குப் போய் எல்லோரும் சாப்பிட்டுவிட்டு வந்தார்கள். அன்று மத்தியானமே ராஜம் உடம்பை என்னமோ செய்கிறதென்று படுத்துக்கொண்டு விட்டாள். கிருஷ்ண சாஸ்திரிகள் இதை கேட்கவும் நடுங்கிப் போய் விட்டார். உடனே திருச்சினப்பள்ளிக்கு தந்திகொடுத்து பெரிய டாக்டரைத் தருவித்துப் பார்க்கச் சொன்னார். டாக்டர் பார்த்து ராஜத்துக்கு ஓர் மருந்தைக் கொடுத்தார். அது அவளைசற்றுநேரத்திற்கெல்லாம் வாந்தி யெடுக்கச்செய்தது. டாக்டர் அதை பரீக்ஷித்துப்பார்த்து இதில் ஏதோ விஷம் கலந்து இருக்கிறதே இன்றைக்கு இந்தக் குழந்தை எங்கே சாப்பிட்டதென்று கேட்டார். அநந்த லக்ஷ்மிஅம்மாளுக்கு உடனே இதில் மோசம் நடந்திருக்கிறதென்று தெரிந்துவிட்டது. கண்ணில் தாரை தாரையாக ஜலம் ததும்பிற்று. தன்மகளை இனி நாம் உயிருடன் காணப்போகிறதில்லையென்று கண்டுகொண்டாள். வைத்தியருக்கு என்னவேண்டுமானாலும் கொடுப்பதாகச்சொல்லி நன்றாய்ப் பார்க்கச் சொன்னாள். வைத்தியர் தன்னால் கூடியமட்டும் நல்லமருந்துகளெல்லாம் கொடுத்துப் பார்த்தார். கடைசியில் இது பலிக்காதென்று சொல்லி ராஜம் வாயில் எடுத்ததைக்காட்டி தான் பரிக்ஷை செய்தவிதத்தையும் அது விஷத்தால் இறந்த கேஸ் என்றும் சர்க்காருக்கு எழுதிவிட்டார். டாக்டர் அப்படிசொல்லி விட்டுப் போனவுடன். புருஷன் பெண்சாதி இவர்கள் பட்ட கஷ்டத்தை நாம் என்னவென்று சொல்வது. இவர்கள் ஊரிலுள்ள சுவாமிக்கெல்லாம் தன் சொத்து முழுவதும் கொடுப்பதாக வேண்டிக்கொண்டார்கள். கடைசியில் ஒன்றும் பலிக்கவில்லை. வெங்கிடராம சாஸ்திரிகள் வீட்டு விருந்திற்கு மறுநாள் காலமே ராஜம் மரணமடைந்தாள். நாலைந்து குழந்தை வைத்திருக்கப்பட்டவர்களும் கூட ஒரு குழந்தை போனால் எவ்வளவோ வருத்தப்படுகிறார்கள். அனந்தலக்ஷ்மி அம்மாள் என்ன செய்வாள்! ராஜத்தோடு அவள் பிராணனும் போய்விடும்போலிருந்தது. கிருஷ்ணசாஸ்திரிகள் புரண்டு புரண்டு அழுதார். அனந்த லக்ஷ்மி மூர்ச்சைபோய்விட்டாள். காமேசுரய்யர் பார்வதியம்மாள் ராமசந்திரன் எல்லோரும் வெகு வருத்தப்பட்டார்கள். நாராயணசாஸ்திரிகள் கண்ணில் மட்டும் ஒரு பொட்டு கண்ணீரைக்காணோம். தங்கமும் அப்படியே யிருந்தாள். ஆனால் ஸ்திரீ ஜாதியாதலாலும் அவர்களுக்குக் கண்ணைக் கசக்கினாலும் குழாயைத்திறந்தால் தண்ணீர் வருவதுபோல் தங்கம் கொஞ்சம் மாமால அழுகை அழுதாள். கடைசியில் அழுது பிரயோஜனம் என்ன. "ஆண்டாண்டுதோறு மழுது புரண்டாலும் மாண்டவர் வருவாரோ மாநிலத்தீர்!" இப்படி ஜனங்கள் வருத்தப்பட்டுக்கொண்டிருப்பதற்குள் போலீஸ்க்காரனைக் கண்டதும் நாராயண சாஸ்திரிகள் வெங்கிடராம சாஸ்திரிகள் கிருஷ்ணசாமியன் இவர்களைக்காணோம். ஜனங்களுக்கெல்லாம் இவர்கள் மீது சந்தேகம் உண்டானது. போலீச்காரர் வந்ததும் பிரேதத்தை எடுக்கக் கூடாதென்று தடுத்துவிட்டார்கள். ஆனால்கிருஷ்ண சாஸ்திரிகள் அவர்களுக்குத் தகுந்த இனாம் கொடுத்தீ தாங்கள் வருவதற்கு முன்னேயே எடுத்துவிட்டதாக ரிபோர்ட் செய்யும்படிக்கும் ஏற்பாடுசெய்துவிட்டார். இதற்குள் ஓடிப்போனால் தங்கள் மீது சந்தேகம் வருமென்று கண்டு மூன்றுபேரும் வந்தார்கள். அவர்களைக் கண்டதும் கிருஷ்ணசாஸ்திரிகள் நாராயண சாஸ்திரிகளைப் பார்த்துப் பாவி உனக்காக பலிகொடுத்தேனே என்றழுதார்! அனந்தலக்ஷ்மிஅம்மாள் வெங்கிடராம சாஸ்திரிகளைப் பார்த்து ஐயோ என் ராஜத்துக்கு இந்த விருந்தா போட்டாயென்று அழுதாள். இதையெல்லாம் கேட்டபோலீஸ்காரர் என்னவென்று விஜாரிக்கவும் ஜனங்களெல்லாம் ராஜம் முதல்நாள் அவர்கள் வீட்டில் தான் சாப்பிட்டாள் என்றார்கள். போலீஸ்காரர் உடனே கிருஷ்ண சாஸ்திரிகள் குடும்பத்தை விஜாரித்து கிருஷ்ணசாஸ்திரிகள் அனந்த லக்ஷ்மியம்மாள் இவர்கள் நிலைமையைக் கண்டு பரிதவித்து கிருஷ்ணசாமியன் வெங்கிடராமசாஸ்திரிகள் நாராயண சாஸ்திரிகள் இம்மூவருக்கும் உடனே விலங்குபோட்டு கூட்டிப்போனார்கள்.

பிறகு போலீசார் இன்னும் ரகசியமாய் விஜாரிக்க ஆரம்பித்தார்கள். அன்று வீட்டில்யார் சமையல் செய்தாரென்று விஜாரித்து அவர்களையெல்லாம் கூப்பிட்டுக் கேட்டதில் ஒருவன் கிருஷ்ணசாமியன் தான் ஏதோ தனியாய் அன்னமெடுத்து ஒரு உள்ளில் கொண்டுபோய் என்னமோசெய்து அதையும் அதோடுமற்ற அன்னத்தையும் பரிமாற எடுத்துக்கொண்டு போனார் என்றான். பரிசாரகர்களில் சிலர் கிருஷ்ணசாமிய்யன் தான் ராஜத்துக்கு வேண்டிய ஆகாரமெல்லாம் பரிமாறினார் என்றார்கள். போலீசார் பிறகு அன்றுமுதல்நாள் யாராவது எங்கேயாவது போயிருந்தார்களா என்று விஜாரித்தார்கள். கிருஷ்ணசாமிய்யன் முதல்நாள் திருச்சினப்பள்ளிக்குப்போய் வந்ததாக சமாசாரம்வந்தது. பிறகு போலீசார் எல்லாம் திருச்சினப்பள்ளிக்குவந்து டாக்டர்களையெல்லாம் இரகசியமாக விஜாரித்ததில் ஒருவர் தன்னிடம் ஒருவன்வந்து விஷம் வாங்கிப் போனதாகவும் சொன்னார். அவர் சொன்ன அடையாளங்களையெல்லாம் யோஜிக்குமளவில் கிருஷ்ணசாமிய்யன் என்றே நிச்சயமாய் எண்ணவேண்டியிருந்தது. பிறகு போலீசார் விஜாரித்ததையெல்லாம் சர்க்காருக்கு ரிபோர்ட்செய்து விட்டார்கள். நாராயணசாஸ்திரிகளை ஜயிலுக்கு அனுப்பினவுடனே தங்கம் தன் புருஷன் ஸ்ரீனிவாஸசாஸ்திரிக்குத் தந்திகொடுத்தாள். அவர் உடனேவந்து வைக்

கீல்வைத்து நாராயணசாஸ்திரிகள் முதலியவர்களை ஜாமீன்பேரில் விடும்படி தன்னால் கூடியவரையில் ஓடியாடிப்பார்த்தார். ஒன்றும்பலிக்கவில்லை.—கிருஷ்ணசாஸ்திரிக்கு ஒருவரும் சமாதானம் சொல்லமுடியவில்லை.—தேறுதல் சொல்வதற்கு ஏதாவது ஒரு குழந்தையிருந்தாலும் சொல்லலாம். ஒன்றும் இல்லை! "பட்டகாலிலே படும் கெட்டகுடியே கெடும்" என்பதுஅவர்களுக்குத்தான் சரியாகஇருந்தது. பகவான் ஒரு மனிதனையாவது எல்லாம் பொருந்தினவனாக வைக்கிறதில்லை.—ஒருவனுக்கு குபேரனைப்போல் சொத்தைக்கொடுக்கிறார் குழந்தை என்பதே கிடையாது.—சிலசமயங்களில் கொடுப்பதைப்போல் கொடுத்து கொஞ்சம் அல்பசந்தோஷத்தை அடையச்செய்து பிறகு அதையும் அபகரித்துக் கொண்டுபோய்விடுகிறார். ஒருவனுக்கு இன்றைக்கு சாப்பிட்டால் மறுநாளைக்கு ஆகாரம்கிடையாது. அவனுக்குப்பிள்ளை குட்டி ஒன்றும் தேவையில்லை. அவனுக்கு வேண்டாம் வேண்டாம் என்கும்போதே டஜன் கணக்காய் குழந்தைகளைக்கொடுக்கிறார். அவன் ஐயோ பகவானே எனக்கு ஏன் இந்தக்குழந்தைகளைக் கொடுத்தாயென்று அழுகிறான். இப்படி பகவான் சோதனையாக கிருஷ்ணசாஸ்திரிகளுடைய மூன்று குழந்தைகளையும் பரித்துக்கொண்டு போய்விட்டார். பாவம் கிருஷ்ணசாஸ்திரிகளும் அனந்தலக்ஷ்மி அம்மாளும் வெகு வருத்தத்துடன் ஊர்போய்ச்சேர்ந்தார்கள். அப்பொழுதும் அவர் ராமச்சந்திரனை மறிக்கவில்லை. ராமச்சந்திரனைத் தேற்றி அவனுக்கு நல்ல புத்தி சொல்லிவிட்டுப்போனார். ராமச்சந்திரனுக்குத்தன் பெண்ணைக்கொடுத்ததுமுதல் அவனை கிருஷ்ணசாஸ்திரிகள் தன் பிள்ளைபோலவே பாவித்துப்பிரியம் வைத்திருந்தார். ராமசந்திரன் சிறுபிள்ளையாதலால் கொஞ்சம் மாப்பிள்ளை பிகுவும் உபசாரமும் கிருஷ்ணசாஸ்திரிகளிடம்கர்ண்பித்துக்கொள்வான். அவர் அப்போதும் அவன் கிடக்கிறான் சிறுபிள்ளை என்று அவனை மன்னிப்பார். என்ன தான் கிருஷ்ணசாஸ்திரிகள் தன் உயிரையே அவர் பெண் ராஜத்தின் மீது வைத்திருந்தும் எமன் சிறிதேனும் இரக்கமில்லாமல் அவரைவிட்டு ராஜத்தைப்பிரித்து விட்டான். ராஜம் இறந்ததற்கு போலீசார் வந்ததைப்பார்த்த பூவரசநல்லூர் கிராம முன்சீப்பும் தான் ரிபோர்ட் செய்யாமலிருந்தால் தன் வேலை போய்விடுமென்று பயந்து உடனே ராஜம் இறந்ததையும் முதல்நாள் சாப்பிட்ட வீட்டையும் ஊராருடைய சந்தேகத்தையும் விவரமாகக்கண்டு ரிபோர்ட் செய்துவிட்டார். இதெல்லாம் போகவும் சர்க்காரில் இதை செவ்வையாய் விஜாரிக்கும்படி ஓர் டிப்டிகலெக்டரை அனுப்பினார்கள். அவர்விஜாரிப்பதற்கு ஓர் தினத்தைப் போட்டுக்கொண்டு கைதிகளை காவல்காக்கும்போது ஆள்களிடம் ரகசியமாக அவர்கள் தூங்கும்போது பேசிக்கொள்ளும் வார்த்தைகளைக்குறித்து வைத்துத்தன்னிடம் அனுப்பும்படி சொல்லி வைத்திருந்தார். குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்குமல்லவா? அதிலும் கொலைசெய்துவிட்டால் அது மனதைவிட்டு நீங்குமோ!

சாதாரணமாக அத்தான் வீட்டில் திருடின அம்மாஞ்சி தன் வாயாலேயே அகப்பட்டுக்கொண்டான்-என்பார்கள். அதெப்படியென்றால் அம்மாஞ்சி அத்தான் வீட்டில் அடிக்கடிபோய் பெட்டிவைக்கும் இடம் முதல் தெரிந்துக்கொண்டிருந்தான். ஒருநாள் அத்தான் வீட்டிற்குள்ளேவந்தான். அத்தான் பெண்சாதி புறக்கடைப்பக்கத்தில் முத்தத்தில் கையுரல்தோசைக்கு அறைத்துக்கொண்டும் தனக்கு ஆகாத சில ஜனங்களை வாயாலறைத்துக் கொண்டுமிருந்தாள். அம்மாஞ்சிக்கு ஒரு தாசியிருந்தாள். அவளுக்குப்பணம் கொடுக்க அம்மாஞ்சிக்கு ஐவேஜி இல்லை. இதுதான் சமயமென்று கண்டு மெள்ள எட்டிப்பார்த்தான். அத்தாமன்னி வெகு ஸ்வாரஸ்யமாய் பேசிக்கொண்டிருந்தாள். இதுதான் சமயமென்று கண்ட அம்மாஞ்சி பணப்பெட்டியை எடுத்து கக்ஷத்தில் இடுக்கிக்கொண்டு தன் அடையாளம் தெரியாதபடி ஒரு முட்டாக்கு போட்டுக்கொண்டு வெளியே வந்தான் வந்ததும் கொஞ்சதூரத்தில் அத்தான் வருவதைக் கண்டுவிட்டான். உடனே அம்மாஞ்சி பெட்டியை அப்படியே கீழே போட்டுவிட்டு ஓர் சுவர் மீது ஏறிக் குதித்து ஓடிப்போய் விட்டான். யாரோ ஓடுவதைக் கண்ட அத்தான் ஓடி வந்து பார்க்க தன் பணப்பெட்டியாயிருப்பதைக்கண்டு சந்தோஷித்து நல்லவேளை எவனோ திருடன் நம்மை கண்டுவிட்டு பயந்து ஓடிப்போய்விட்டானென்று அதற்குள் கூட்டம் கூடினவர்களுடன் சொல்லிக்கொண்டிருந்தான். அதற்குள் அம்மாஞ்சி ஓடிவந்து என்ன சங்கதி என்றான். அத்தான் பணப்பெட்டியை எவனோ எடுத்துக்கொண்டுவந்து தன்னைக்கண்டுவிட்டு ஓடிப்போய்விட்டானென்று சொல்லவும் அம்மாஞ்சி மேல்வார்த்தைகூடக் கேளாமல், தன்மீது சந்தேகமில்லாமலிருக்கும்பொருட்டு சொல்வதாக நினைத்துக்கொண்டு அத்தானைக் கண்டிப்பதுபோல "அத்தான் உனக்கு நன்றாய் வேண்டும். பணப்பெட்டியை கூடத்து உள்ளே வைக்கிறாய் அதை ஒருவன் பார்த்தே இருந்து குறிப்புவைத்திருக்கிறான். அத்தாமன்னி ஒரு அசடு. தோசைக்கறைத்துக்கொண்டும் அரட்டை யடித்துக்கொண்டும் பின் கட்டிலிருந்திருப்பாள். வந்தவன் பெட்டியை கக்ஷத்தில் இடுக்கியிருப்பான். யாராவது பார்த்துவிட்டால் என்னசெய்கிறதென்று முட்டாக்குப் போட்டுக்கொண்டு வெளியே வந்திருப்பான். அங்கே வந்ததும் உன்னைக்கண்டு அப்படியே சுவர் ஏறி அந்தண்டை குதித்துவிட்டே னென்றான்." குதித்துவிட்டானென்பதற்கு, அம்மாஞ்சிக்கு பயத்தால், குதித்துவிட்டேனென்று வாய் உளரிவிட்டது. பக்கத்திலிருந்தவர்கள் அடே திருட்டுப்பயலே! உள்ளது வந்துவிட்டது. நான் தான் திருடினேனென்று சொல்லேன். அந்தண்டை குதித்து விட்டேனென்று

நிஜம் உன் வாயில் வந்துவிட்டது. உனக்கு அம்மாஞ்சியென்ற பட்டப்பெயர் சரிதானென்று சொல்லி கேலி செய்தார்கள். அந்தப்படி கிருஷ்ணசாமி அய்யனும் குற்றமுள்ள நெஞ்சை உடையானதலால், ஒருநாள் ராத்திரி தூக்கத்தில், முகத்தைப் பார் முகம்! விஷத்தை வைத்தேனென்று என்னை மிரட்டினால் நானென்ன செய்வேன்! உங்க சித்தப்பாதானே வைக்கசொன்னாரென்று தூக்கத்தில் உளறினான். சேவகன் இதைக் குறித்துவைத்து டிப்டிகலெக்டரிடம் கொண்டுபோய்க் கொடுத்தான். டிப்டிகலெக்டர் சாக்ஷிகளெல்லோரையும் தருவித்து விஜாரித்தார். கிருஷ்ணசாஸ்திரிகள் கூட தன் வருத்தத்தோடு இதுவும் ஒரு கஷ்டமா என்று விஜாரணைக்கு ஆஜரானார். டிப்டிகலெக்டர், கிருஷ்ணசாஸ்திரிகள், டாக்டர், கிராமமுன்சீப்பு, கிருஷ்ணசாமி அய்யனைக் கார்த்தசேவகன், விஷம் விற்றவைத்தியர், கலியாணத்தில் வந்த சமையல்காரர்களில் இருவர், எல்லோரையும் விஜாரித்தார். கிருஷ்ணசாமி அய்யன் முதலியவர்கள் வக்கீல் வைத்தார்கள். கடைசியில் டிப்டிகலெக்டர் எல்லாரையும் விஜாரித்து குற்றவாளிகளை என்னவென்று கேட்டார். குற்றவாளிகள் செஷன் கோர்ட்டில் சாக்ஷி விஜாரிப்பதாகவும், வாக்குமூலம் கொடுப்பதாகவும் சொன்னார்கள். பிறகு செஷன் கோர்ட்டுக்கு கமிட்செய்யப்பட்டார்கள். செஷன்ஸ் கோர்டில் குற்றவாளிகள் காட்டன் துரையை பட்டணத்திலிருந்து கூட்டிவந்தார்கள். அந்த துறைக்கு 3000 ரூபா கொடுக்கப்பட்டது. துரை வெகு நன்றாய் கேஸ் நடத்தினார். ஸ்ரீனிவாசசாஸ்திரிகள் தங்கள் சொத்தில் பாதி இதில் செலவு செய்துவிட்டார். என்ன செலவுசெய்தும் டிப்டிகலெக்டரிடம் சொன்ன சாக்ஷிகளாலேயே குற்றம் செஷன்ஸில் ருஜுவாகி, கிருஷ்ணசாமி அய்யனுக்கு மரணதண்டனையும், வெங்கட்ராமசாஸ்திரிகள், நாராயணசாஸ்திரிகள் இவர்களுக்கு 20 வருஷம் கடுங்காவலும் விதிக்கப்பட்டது. ஹைகோர்ட்டு அப்பீலிலும் தண்டனை உறுதியாகிவிட்டது.

(இன்னும் வரும்)

எஸ். இராமஸ்வாமி ஐயர், பி. எ.

---

# HAMLET, THE TRANSCENDENTALIST.

(FROM SHAKESPEARE).

# ஹேமசந்திரஸிங் என்னும் ஆத்மவிசாரி.

(ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பு.)

*By Sri Rajanayaki.* ஸ்ரீராஜநாயகி.

---

### நான்காவது அங்கம்.

#### காக்ஷி 5.

**இடம்:**—அரண்மனையில் ஒரு அறை

**காலம்**—பிற்பகல்

(ராணியும், ஹரிராஜஸிங்கும், ஒரு சேவகனும் வருகிறார்கள்.)

**ராணி:**—நான் அவளோடு பேசமாட்டேன்.

**சேவகன்:**—தங்களைப்பார்க்க வேண்டுமென்று எங்களெல்லோரையும் தொந்திரவு செய்கிறாள். ஒரே பிடிவாதப் பைத்தியமாயிருக்கிறாள். அவளைப் பார்த்தால் பரிதாபமாகத்தானிருக்கிறது அம்மணி.

**ராணி:**—அவளுக்கு என்னசெய்ய வேண்டுமாம் இப்பொழுது?

**சேவகன்:**—அடிக்கடி தன் தகப்பனாரைப்பற்றி என்னவோ முணு முணுக்கிறாள். எல்லாரும் மோசக்காரர்கள் ஒருவரையும் நம்பக்கூடாதென்கிறாள். ஐயோ அப்பா என்று பெருமூச்சுவிடுகிறாள். வயிற்றிலும் வாயிலும் அடித்துக்கொள்ளுகிறாள். வைக்கோல் துரும்பு காற்றடித்து மேலே பறந்தால், அதன்மேல் வெகு கோபங்கொண்டு அதை நூறு சுக்காய் கிள்ளிப்போடுகிறாள். அவள் சொல்லுகிறதொன்றும் உருப்புரியவில்லை. அவள் சொல்லுகிற வார்த்தைக்கு அர்த்தமில்லாவிட்டாலும் அவள் சொல்லுகிற மாதிரியினால் அதைக்கேட்கிறவர்கள் அவரவர்களுக்குத்தோன்றியபடி அர்த்தம் பண்ண ஆரம்பிக்கிறார்கள். அந்த அர்த்தத்துக்குத்தகுந்தபடி அவளது வார்த்தைகளைத் திருத்தி மாற்றிக்கொள்ளுகிறார்கள். போதாததற்கு அவளுடைய அலங்கோல வேஷமும் அவளுடைய சைகைகளும் சேர்ந்தால், இவளுக்கு ஏதோ மகாதுக்கம் நேரிட்டுவிட்டது, அதை சொல்லத்தெரியாமல் கஷ்டப்படுகிறாள் என்று தோற்றுகிறது.

**ஹரிராஜ:**—அவளை நேரிலழைத்துப்பேசுகிறதே நலம். இல்லாவிட்டால் அவள் பேச்சைக்கேட்டுக்கொண்டு வேலையற்ற போக்கிரிகள் ஒன்றிருக்க ஒன்றாக இட்டுக்கட்டிவிடுவார்கள்.

ராணி:—ஆனல் அவளை அழைத்து வாருங்கள்
(ஹரிராஜலிங் போய்விடுகிருன்.)

நான் அலுத்துப்போய்க்கிடக்கிறேன். இந்தப் பாவி மனதுக்குக்காற்றில் இலை அசைந்தால் கூட ஏதோ பெரிய ஆபத்தைக்கொண்டு வந்துவிடும் போல் பயமாயிருக்கிறது; கிண்ணம் நிறையப்பாலைக்கொண்டு போகிறவன் அது ததும்பி விழுந்து விடப்போகிறதே என்று பயப்படுவதனுலேயே கை நடுங்கிப்பாலைக்கொட்டி விடுவதுபோல் குற்றமுள்ளநெஞ்சு என்னவருமோ என்னவருமோ என்று பயப்படுவதனுலேயே எல்லா விபத்துகளையும் தன்னிடத்திற்கு வரவழைத்துக்கொள்ளுகிறது.

(ஹரிராஜலிங்கும் உத்பலாக்ஷியும் வருகிருர்கள்)

உத்பலாக்ஷி:—மகாராஜராஜேசுவரி உதயபுரி ராணி அவர்கள் எங்கே?

ராணி:—ஏனடி அம்மா, உத்பலாக்ஷி, என்ன வேண்டும்?

உத்பலாக்ஷி:—

(பாடுகிருள்) (இராகம்: எதுகுலகாம்போதி.)

மன்னன் துரைசாமி வருவானே வாரானே
சேதியைச்சொல்லடி கண்மணியே
என்ன சொன்னனவனேது சொன்னன்
எப்போவருவானே என் மன்னன்
பொன்னம்மாநீ சொல்லடி என்னம்மா.

ராணி:—இதென்ன இப்படிப்பாட ஆரம்பித்துவிட்டாயே! இது எதற்காக?

உத்பலாக்ஷி:—அப்படிச்சொல்லாதேயுங்கள், நன்ருய்க்கவனித்துக்கேளுங்கள். (பாடுகிருள்) (முகாரி ராகம்:)

தள்ளாத நாளையிலே தலைசாய்க்க ஒழியாமல்
உள்ளங்கால் நோவெடுக்க ஓடி ஓடியுழைத்தீ
[ரோ!
பொல்லாத ராஜ்யத்தைப் பொறுப் பாகப்பாது
[காத்து
காணுத ராஜ்யத்தில் கண்ணயரப்போனீரோ,
அப்பனே ஐயனே அருளுடனுதரவே!

ராணி:—இந்த மட்டோடு நிறுத்து உத்பலாக்ஷி, இது நன்ருயில்லையே!

உத்பலா:—இன்னும் கொஞ்சம் கேளுங்கள்—(பாடுகிருள்):—

கண்ணன பெண்ணிருக்கக்கணிகமுடன் மகனிருக்க:— (ராணு வருகிருன்)

ராணி:—இந்த வயிற்றெரிச்சல் வேஷத்தைப் பார்த்தீர்களா, மகாராஜ்,

உத்பலா:—(பாடுகிருள்.)

மகன் கை நெருப்பில்லாமல் மௌனமாய்ப்போனீரோ!

பெண் கை நீரில்லாமல் பேசாமல் போனீரோ,
அப்பனே ஐயனே அருமையுடனுதரவே!

ராணு:—சௌக்கியமா அம்மா? என்னவிசேஷம்?

உத்பலா:—இருக்கட்டும், எல்லாருக்கும் பொதுவில் சுவாமி இருக்கிருர். ஊரில் அழகியைப்பிடிக்கப்போகிருர்களென்று ஆந்தையும் குரங்கும் ஊரைவிட்டோடி விட்டதுகளாம். எப்படி எப்படி இருந்தவர்களெல்லாம் எப்படி எப்படியோ ஆகிவிடுகிருர்கள். உங்கள் வீட்டுக்கு சீக்கிரத்தில் பகவான் சாப்பாட்டுக்கு வருவார். ஜாக்கிரதையாயிருங்கள்.

ராணு:—தகப்பனர் இறந்ததில் அவள் மனம் கலங்கிவிட்டது.

உத்பலா:—போதும், இதைப்பற்றி இனிமேல் அதிகமாய்ப் பேசவேண்டாம். ஆனல் யாராவது இதற்கு என்ன அர்த்தம் என்று கேட்டால் இப்படிச்சொல்லுங்கள் (பாடுகிருள்):—

(இராகம்: ஸஹானு)

காக்கை சலித்தால் காதம்போய் காதம்வரும்,
குருவி சலித்தால் கூண்டினுள்ளே வந்தடை
[யும்,
பருந்து சலித்தால் பட்டணமெல்லாம் வட்ட
[மிடும்,
மங்கை சலித்தால் எங்கேபோவாள் மடமங்
[கை?

ராணு:—ஐயோ பாவம்! இவள் பரமசாது!

உத்பலா:—அதிகமாயில்லை, இதோடு முடித்துவிடுகிறேன். (பாடுகிருள்):—

(இராகம்:—நீலாம்புரி)

"கண்போலெனை வளர்த்துக்காதல்வைத்த நா
[ளையிலே,
பெண் பேசவந்தார்கள் பிரியமுடனுந்தனையா;
வீட்டினுக்கு நல்விளக்கு வெளிதனிற்கு மாபர
[ணம்,
நாட்டிலுள்ள பெண்களுக்கு நாயகந்தான் வே
[ண்டுமென்ருர்.
வாலிபந்தானென்று சொல்லி மாசுமறு செய்
[யாதே,
பாலியந்தானென்று சொல்லிப்பழி பழுது செ
[ய்யாதே!

ராணு:—இவள் எத்தனைநாளாய் இப்படி இருக்கி
[ருள்?

உத்பலா:—எல்லாம் கூடிய சீக்கிரத்தில் சரியாய் விடும். பொறுத்துக்கொள்ளவேண்டும், என்ன செய்கிறது? அவரை சொல்லாமல் கொண்டுபோய் நெருப்பில் போட்டுவிட்டதை நினைத்தால் எனக்கு அழுகை தான் வருகிறது. அண்ணவை உடனே வரச்சொல்லிடில்லிக்குக்கடிதம் எழுதியிருக்கிறேன்! உங்களுக்கெல்லாம் நமஸ்காரம். அடே வண்டிக்காரா, சீக்கிரம் வண்டியைக்கட்டு. நான் போய்வருகிறேன் ராஜாத்திகளே! (போய்விடுகிருள்.)

ராஜ:—அவள் பின்னோடு போங்கள். தயவுசெய்து அவளைக்கவனித்துப் பார்த்துக்கொள்ளுங்கள்.

(ஹரிராஜஸிங் போய்விடுகிருன்.)

இவள் தகப்பனர் இறந்துபோன விஷயத்தில் மிகவும் துக்கப்பட்டு விட்டாள். தனக்கு யாதொரு ஆதரவுமில்லாமல் போய்விட்டதில் மனது ஏக்கம் பிடித்துவிட்டது. ஐயோ ஜோதி, இந்த துக்கங்கள் மட்டும் வந்தால் ஒன்றிரண்டாய் வருகிறதில்லை! ஒன்றின் பின்னொன்ருய்க் கும்பல் கும்பலாய்த் தான் வருகின்றன. முதலில் அவளுடைய தகப்பனர் கொல்லப்பட்டார். அவள் முற்றிலும் நம்பியிருந்த உன் மகனே அவரைக்கொன்று விட்டான். இப்பொழுது அவனையும் ஊரைவிட்டு அனுப்பிவிடும்படி நேரிட்டது. இத்தனைக்கும் அவனே தான் காரணம். ஜனங்களோ புத்திகலங்கி மனந்தடுமாறி நடந்த விஷயம் இன்னதென்று தெரியாமல் தாறுமாருய் யோசிக்கிருர்கள். நாமும் புலஸ்தியவர்மாவை வெகு அவசரமாய் ரகஸியத்தில் அடக்கம் செய்துவிட்டோம். இந்தப்பெண்ணோ சித்தப்பிரமைகொண்டு இனி தெளிவடைய மாட்டாள் போலிருக்கிறது. போதாததற்கு அவள் தமையனும் டில்லியிருந்து ரகஸியமாய்த்திரும்பி வந்திருக்கிருனும், அவன் மனதைக்கலைத்து நமக்கு விரோதமாய்த் தூண்டிவிடுகிறதற்கு வேண்டிய ஆசாமிகள் தயாராய்க் காத்துக்கொண்டிருக்கிருர்கள். அவன் தகப்பனரைக்கொன்ற விஷயமாக நம்மேல் குற்றஞ் சாட்டக் கொஞ்சமேனும் யோசியார்கள். ஓகோ ஈதென்னமோசம்! இதையெல்லாம் யோசித்தால் என்னைச்சித்திரவதைசெய்வது போலிருக்கிறது.

(உள்ளே கூச்சல்கேட்கிறது)

ராணி:—அதென்ன இரைச்சல் அது?

[கூர்க்கர்கள் என்பவர்கள் ஒரு மலைஜாதியார். யுத்தப்பிரியர்கள். யாருக்குவேண்டுமானுலும் கூலிக்குச்சேவகம் செய்பவர்கள்.]

ராஜ—என்னுடைய கூர்க்கர்களெங்கே? வாசலில் அவர்களைக்காவலிருக்கச்சொல்! உள்ளே யாரையும் விடவேண்டாம்.

(ஒரு பிரபு ஓடிவருகிருன்)

என்ன சமாசாரமையா?

பிரபு:—இந்த க்ஷணமே தப்பித்துக்கொண்டு போங்கள் மகாராஜ்! சந்திரனைக்கண்ட சமுத்திரம் தலையெடுத்துக்கரையில் மோதி அலைகளினல் கரையை விழுங்கி விடுவதுபோல், லக்ஷ்மணஸிங்கைக் கண்டதும் ஜனங்களெல்லாம் ஒரே கும்பலாய்க் கூச்சலிட்டுக்கொண்டு அரண்மனைக்காவல்காளர்களையெல்லாம் துரத்தியடிக்கிருர்கள். இதற்கு முன் ராஜ்யமே நடக்கவில்லை போலும், இப்பொழுது தான் இவர்களே உலகத்தைப்புதிதாய் சிருஷ்டிப்பவர்கள்போலும் பழையசாஸ்திரம் சம்பிரதாயம் எல்லாவற்றையும் மறந்து "ஜயலக்ஷ்மணஸிங், ஜயமகாராஜ், ஜயராணுலக்ஷ்மணஸிங்" என்று கைகொட்டிக்கூச்சலிடுகிருர்கள். தங்கள் மேல்வஸ்திரத்தையே கொம்புகளில் கட்டிக்கொடிகளாகப்பறக்க விடுகிருர்கள்.

ராணி:—அடே ஆடுகளா! முதல் ஆடு கிணற்றில் விழுந்தால் எல்லா ஆடுகளும் கிணற்றில் விழவேண்டுமா? (உள்ளே சப்தம்கேட்கிறது.)

ராஜ:—அதோ கதவை உடைத்துவிட்டார்கள்.

(கையில் கத்தியுடன் லக்ஷ்மணஸிங்கும் பின்னல் ஜனங்களும் வருகிருர்கள்.)

லக்ஷ்மண:—எங்கே அந்த ராஜ? ஐயா, நீங்களெல்லாரும் வெளியேதானே நில்லுங்கள்.

ஜனங்கள்:—இல்லை, நாங்களும் வருகிரோம்.

லக்ஷ்மண:—வேண்டாமையா, நான் சொல்லுகிறபடி கேளுங்கள்.

ஜனங்கள்:—ஆனல் அப்படியே செய்கிரோம்! (வெளியே போய்விடுகிருர்கள்.)

லக்ஷ்மண:—உங்களுக்கு எல்லாருக்கும் வந்தனம். கதவை ஜாக்கிரதையாய் காத்துக்கொண்டிருங்கள். ஓய் ராஜனே, என் தகப்பனரைக்கொண்டுவாரும்!

ராணி:—மெதுவாய்க் கேளப்பா, லக்ஷ்மணஸிங்.

லக்ஷ்மண:—இந்த தேகத்தில் ஒரு சொட்டு ரத்தமாவது இப்பொழுது மெதுவாய் ஓடுமேயானுல், அந்த ரத்தம் என் தகப்பனரிடத்திலிருந்து வந்ததல்ல. அதுவே என் தாய் வேசையென்று பறைமறையும். இறந்து தெய்வமாயிருக்கிற குற்றமற்ற என் தாயை அபவாதத்திற் கிழுப்பேனு?

ராஜ:—ஏனப்பா, லக்ஷ்மணஸிங், இவ்வளவு தடபுடலாக நமக்கு விரோதமாய்க் கலகம் செய்ய ஆரம்பித்துவிட்டாயே! உனக்கு என்னவேண்டும்? பயப்படாதே, ஜோதி, நம்மைப்பற்றி யாதொருகவலையும் வேண்டாம். ஒரு ராஜனுடைய தேகத்தை தர்மதேவதை காப்பாற்றுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் நமக்கு விரோதமாய்க் கலகம் செய்பவர்கள் எவ்வளவு பலசாலிகளாயும் சாமர்த்தியக்காரர்களாயுமிருந்தபோதிலும் அவர்களுடைய சூழ்வினைகள் நம்மை ஒருபோதும் பாதிக்காது. ஹம்ஸத்தின் முதுகில் ஜலம்போல், பட்டும்படாமல் நழுவிவிடும். ஆதலால் நீ பயப்படாமலிருப்பாய் ஜோதி! நம்மேலென்னகோபமப்பா உனக்கு, லக்ஷ்மணஸிங்? தாராளமாய் ஒளியாமல் சொல்!

லக்ஷ்மண:—என் தகப்பனர் எங்கே?

ராஜ:—இறந்துபோய்விட்டார்.

ராணி:—இவர் கொல்லவில்லை.

ராஜ:—அவன் கேட்கவேண்டியது முழுவதும் கேட்கட்டும்.

லக்ஷ்மண:—அவர் எதனால் இறந்தார்? சும்மா இப்படியெல்லாம் என்னைப்பேச்சினால் ஏமாற்ற முடியாது! உங்கள் பித்தலாட்டங்களெல்லாம் என்னிடத்தில் பலிக்காது! என் கேள்விக்குச்சரியான சமாதானம் கிடைக்கிறவரையில் ஆயிரம் நரகத்துக்குவேண்டுமானாலும் போவேன்! ஸப்தலோகங்களையும் தாண்டுவேன்! என் தகப்பனாரைக் கொன்றதற்காக பதிலுக்குபதில் பழிவாங்கும் விஷயத்தில் யாராயிருந்தாலும் தயை தாக்ஷிண்யம் பார்க்கமாட்டேன்! புண்ணியமோ பாபமோ வந்தது வரட்டும் என்று கொஞ்சங்கூட யோசிக்காமல் பழிதீர்த்துவிட்டே மறுவேலை பார்ப்பேன்!

ராஜா:—நீ சொல்கிறதேசரி, உன்னையார் தடுக்கக்கூடும்?

லக்ஷ்மண:—நானாய் நின்றாலொழிய என்னை யாரும் தடுக்கமுடியாது. இதற்காக நான் அதிக உதவியைத்தேடப் போகிறதில்லை! வல்லவனுக்குப் புல்லுமாயுதம் என்று சொற்ப உதவியைக்கொண்டே என் காரியத்தை முடித்துக்கொள்வேன்!

ராஜா:—ஏனப்பா, லக்ஷ்மணவிங் உன் அருமைத் தந்தையைக் கொன்றவர்களைப் பழிவாங்கவேண்டுமென்று எண்ணமிருந்தால் [அந்த மாதிரி எண்ணம் மனிதனுக்கிருக்க வேண்டியது நியாயந்தான்] அதற்காகப் பைத்தியக்காரனைப்போலவாவது கள்ளுகுடித்தவெறியனைப் போலவாவது சத்துருமித்திரர்கள் யார் என்றும் குற்றம் யாரிடத்திலென்றும் கவனிக்காமல் எல்லாரையும் கொன்றுவிட வேண்டுமா? சூதாடித் தோற்றவன்போல் எல்லாரிடத்திலும் ஒரே கோபமாயிருக்கலாமா?

லக்ஷ்மண:—அவரைக்கொன்றதற்குக் காரணபூதமாயிருந்த சத்துருக்களைத்தவிர வேறு யாரையும் விரலால் தொடேன்.

ராஜா:—அவர்கள் இன்னாரென்று அறிந்து கொண்டாயோ? அல்லது இப்பொழுதாவது அறிந்து கொள்ளச் சம்மதமோ?

லக்ஷ்மண:—அவருக்கு உண்மையான சிநேகிதர்களாயிருந்தவர்களை இரண்டு கையினாலும் ஆலிங்கனம் செய்து கொள்ளத் தயாராயிருக்கிறேன். அவர்களுடைய உதவிக்காக என் தலையை வேண்டுமானாலும் கொடுப்பேன்.

ராஜா:—ஆ! இப்பொழுது சொன்னாயே இந்த வார்த்தைக்கு வராகன் கொடுக்க வேண்டும். இப்பொழுது தான் நீ ராஜ விசுவாசமும் நன்றியறிவுமுள்ள உயர் குடியிற்பிறந்த சிறுபிள்ளையாக லக்ஷணமாகப் பேசுகிறாய். நாம் உன் தகப்பனார் இறந்த விஷயத்தில் எவ்வளவு வ்சனப்படுகிறோமென்றும் அதில் நாம் கொஞ்சமேனும் சம்பந்தப்படவில்லை என்றும், நம்பேரில் குற்றமேயில்லையென்றும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உனக்கு இப்பொழுது விளக்கிக் காட்டுகிறோம்.

ஜனங்கள் [உள்ளே]:— அவளை உள்ளேவிட்டுவிடு! அவள் போகட்டும்!

லக்ஷ்மண:—அங்கே என்ன இரைச்சல் வெளியே [உத்பலாக்ஷிவருகிறாள்!]

எனக்கு வருகிற கோபமும் துக்கமும் என்னை ஏன் எரித்து சாம்பலாக்கி விடாமலிருக்கின்றன? இந்தக் கண்ணீர்களிலுள்ள உப்பெல்லாம் என் கண்ணை அவிக்காதோ? ஐயோ குழந்தாய், உன் நிலைமையைக்காண ஸஹிக்கவில்லையே! அருமைக்கண்மணியே, என் பிரிய ஸஹோதரி, அம்மா உத்பலா, அஞ்சொற்கிளியே, இன்குரல் குயிலே, அழகிய பூவே, பூவின் மணமே, நீயும் இப்படிப்போவாயோ! கிழவர்களுடைய பிராணன்போலவே புத்தியும் க்ஷணத்தில் பறந்துவிடுமோ? அல்லது உன் பிதாவுக்கு நல் வழி காட்ட உன் புத்தியைத் துணையாக அனுப்பியிருக்கிறாயோ?

உத்பலா:—[பாடுகிறாள்] (இராகம்-நீலாம்புரி

மந்திரிப் புத்திக்கு மரணதசை வந்தக்கால்
முந்திரிப் புத்தியாலே நான் முயன்றென்ன செய்வேன் நன்னானே.
நா நி நன்னா நன்னானே! நல்லது போய்வா, என் கண்ணே.

லக்ஷ்மண:—நீ நல்ல புத்தியோடிருந்து நம் தந்தையைக் கொன்றவர்களைப் பழி வாங்கவேண்டுமென்று சொல்வாயானால் அது இவ்வளவு உருக்கமாக எனக்குச் சுருக்கென்று படாது.

உத்பலா:—[பாடுகிறாள்.]

"அகமேவு மண்ணலுக்கென்னல்லலெல்லாஞ் [சொல்லிச்
சுகமாக நீ போய்ச்சுகங்கொடுவா பைங்கிளி [யே!"

அவன் பக்காத்திருடன்-வீட்டில் வரும் பொழுது காரியக்காரனாக வந்தான்-போகும் பொழுது மாப்பிள்ளையாகப் போனான்.

லக்ஷ்மண:—சரியான பேச்சைக்காட்டிலும் உன் பிதற்றலுக்கு சக்தி அதிகமாகவே யிருக்கிறது!

உத்பலா:—உங்களுக்கெல்லாம் கொடுப்பதற்காக இதோ மடிநிறைய புஷ்பங்கள் கொண்டுவந்திருக்கிறேன். இந்த ரோஜாபுஷ்பம் என் தமையனுக்கு வேண்டும். இந்தாருங்கள் தங்களுக்குக்காசித்தும்பை இந்த ஜவந்தி புஷ்பம் ராணியவர்களுக்குத்தான் ஏற்றது. யுவராஜாவுக்சென்று கொன்றை புஷ்பம் தேடினேன், அகப்படவில்லை. எங்களப்பாவைக் கொன்றவுடனே எல்லாம் வாடிப்போய்விட்டதுகளாம். பன்னீர்ப்புஷ்பம் அகப்பட்டால் அப்பாவுக்குக்கொடுத்தனுப்பவேண்டும். எனக்கு இந்த முல்லையரும்பு போதும்; என்னோடு கூடப்போனாரே அவருக்கு இந்தத் தாமரைப்பூ. எங்களப்பா நல்ல கதியடைந்ததாகத் தான் சொல்லுகிறார்கள். அவர் செய்த கடைசி காரியம் ரொம்ப சரி என்று சொல்கிறார்கள்: ஏனெனில்:—(பாடுகிறாள்)

காதற்ற ஊசியும் வாராது காண்கடைவழிக்கே.

லக்ஷ்மண:—நினைப்பு, யோசனை, துக்கம் கொலை எல்லாவற்றையும இவள் பேச ஆரம்பித்தால் அழகாகச் செய்துவிடுகிருள்.

உத்பலா (பாடுகிருள்) (இராகம்... உசேனி.)

(1) சின்னச் சிறுகுட்டியென்றென்னை
ஏமாற்றப்பார்த்திரோ?
என்னிடமிந்த ஜபம்பலியாது
போம், போம், போமையா.

(இராகம்: - நீலாம்புரி)

(2) மதியூகமந்திரியாய்
வல்லவர்க்கும் வல்லவராய்
அதிகுணசுந்தரராய்
ஆளவந்தார்பேரரசோ.

(இராகம்: எதுகுல காம்போதி)

(3) தில்லைவெளியிலே கலந்துகொண்டார் திரு
[ம்பியும்வருவாரோ
குஞ்சிதபாதத்தைக் கண்டாலொழியகுறை
[யது நீங்காதே
கட்டையிருக்கையில் சிதம்பரம்போய் காண
[வேணுமையே
மனதைப்புண்ணகச்செய்யா மலொருதரம்
[போய்வாவென்றுசொல்லையே.

எல்லாருக்கும் கொஞ்சம் மருக்கொழுந்து கொடுக்கிறேன். என் ஞாபக மிருக்கட்டும், நான் போய்வருகிறேன், மறந்துவிடாதேயுங்கள். (போய்விடுகிருள்.)

லக்ஷ்மண:—ஐயோதெய்வமே, உனக்குமா கண்ணில்லை.

ராணு:—தம்பி, லக்ஷ்மணவிங், இதையெல்லாம் பார்த்தால் உன்னைக் காட்டிலும் எனக்கு அதிக துக்கம் வருகிறது. உன்னுடைய துக்கத்தில் எனக்கு நியாயமாயுள்ள பங்குக்கு நீ இடங் கொடுக்க வேண்டும். அப்படித் தனியாகக் கலந்து பேசுவோம்வா. உனக்கு நம்பிக்கையான பந்துமித்திரர்களை யெல்லாம் கூப்பிட்டு ஒரு சபை கூட்டு. அவர்களிடத்தில் உன் குறையைச்சொல்லிக்கொள். அவர்களுடைய விசாரணைக்கு நான் உடன் படுகிறேன். அவர்கள் பார்த்து உன் தகப்பனாரைக் கொன்ற விஷயத்தில் நாம் நேராகவாவது உட்கையாகவாவது சம்பந்தப் பட்டதாகச்சொன்னல், நம்முடைய ராஜ்யத்தையும் பொருளையும் பிராணனையும் உனக்குத்திருப்திசெய்யக் கொடுத்துவிடுகிறோம். அப்படி இல்லாத பக்ஷத்தில் நம்முடைய யோசனையை அங்கீகரிக்க உனக்கிஷ்டமானல், இருவருமாகக் கலந்து உனக்கு சமாதானம் செய்யவேண்டிய வழியைத்தேடுவோம், அதற்கு நாம் எப்பொழுதும் ஒத்தாசை செய்யத்தயாராயிருக்கிறோம்.

லக்ஷ்மண:—சம்மதம், அப்படியே ஆகட்டும். அவர் ஏன், என்னமாகக் கொல்லப்பட்டார் என்றும், அவரை ரகசியமாக அவசரப்பட்டு அடக்கம் செய்தகாரணமும், அவருக்குச் செய்யவேண்டிய பிதிருக்கிரியைகளும் தானதருமங்களும் ஏன் எனக்குத்தெரிவிக்காமல் செய்யப்பட்டனவென்பதும் எனக்கு சரியான சமாதானம் சொல்லுகிற வரையில் ஆகாசத்தையும் பூமியையும் கதற அடித்து விடுவேன்!

ராணு:—நல்லது அப்படியே ஆகட்டும். குற்றமுள்ளவர்களை நாமே உன்னிடத்தில் ஒப்புவித்து விடுகிறோம். நம்முடன் வா, போவோம்.

(எல்லோரும் போய்விடுகிருர்கள்.)

(இன்னும் வரும்.)



## CURRENT TOPICS.

### லாலா லஜபதிராய்.

———:o:———

இவர் பஞ்சாப் சிப்கோர்ட் வக்கீல். உத்தமத் தேசாபிமானி. இங்கிலாந்து அமெரிக்கா முதலான தேசங்களுக்குப் பிரயாணம் போய் வந்தவர். கனம் மிஸ்டர் கோகலேயவர்களோடு காங்கிரஸ் பிரதிநிதியாய் இங்கிலாந்துக்குச் சென்று அங்கே பிரசங்கம்செய்து வந்தவர். இவர் கல்வி, செல்வம், ஸத்குணம், சம்பத்து ஆகிய எல்லாவற்றிலும் சிறந்தவர். இப்படிப்பட்டவர் பொதுஜனக்ஷேமத்தை நாடித் தன்னயம் பாராட்டாமல் உழைத்து வந்ததால் இவருடைய ஊக்கமும் முயற்சியும் நல்ல பலனைக் கொடுத்துவந்தன. இப்படியிருக்கையில் திடீரென்று இவரை இந்தியா கவர்மெண்டார் 1818-வருஷத்து 3-வது ரெகுலேஷன்படிக்கு இராஜாங்க விரோதியென்று பிடித்துக் கைதிசெய்து கண்காணு இடமான மாண்டலேயிலுள்ள டப்பரின் கோட்டையில் கொண்டுபோய்க் காவலில் வைத்து விட்டார்கள். இதனுல் அல்லோல கல்லோலப்பட்டு எங்கும் ஜனங்கள் தாயையிழந்த கன்றுபோல் இவருக்காகத் தபிக்கிருர்கள். கவர்ன்மெண்டாரோ இவரும் ஸர்தார் அஜித்சிங் என்பவரும் சேர்ந்து கவர்ன்மெண்டுக்கு விரோதமாகக் கலகம்செய்து வந்தார்களாதலால் அவர்களைப்பிடித்துத் தூரதேசத்

தில் கொண்டுபோய்க் கைதிசெய்துவைக்க வேண்டியது அவசியமாயிற் றென்கிறார்கள். அவர்செய்த குற்றம் என்னவென்று பார்லிமெந்து சபையில் கேட்ட பலகேள்விகளுக்கும் சரியான பதில் இல்லை இந்தியா செக்ரிடெரியாகிய மிஸ்டர் மார்லியவர்கள் பஞ்சாப் லெப்டினென்ட் கவர்னர் ஸர் டென்ஸில் இப்பெட்ஸன் அவர்களோடு இரகசியமாய்க் கலந்துபேசி உண்மையை யுணர்ந்து கொண்டதில் கவர்ன்மெண்டார் இவர்களிருவரையும் பிடித்துத்தூர தேசத்தில் கொண்டுபோய்ச் சிறையிருத்தியது இராஜ்ஜியக்ஷேமத்துக்கு அவசியமென்று தான் அறிந்துகொண்டதாக மட்டும் சொல்கிறாரேயன்றி இவர்கள்செய்த குற்றங்களை வெளிப்படுத்தி விசாரிப்பதாக உத்தேசமில்லை யென்கிறார். பார்லிமெந்து சபையில் அனேக மெம்பர்கள் இது விஷயமாய் இந்தியா மந்திரியைக் கேள்விகள் கேட்டு வந்தாலும் ஜனங்களுக்குத் திருப்தியானபதில் கிடைக்கவில்லை. மேமீ 18உ பார்லிமெந்து சபையில் இது விஷயமாய் நடந்த பிரஸ்தாபத்தில் ஸர் ஹௌவர்ட் வின்ஸென்ட் என்னும் மெம்பரொருவர் லஜபதிராயை ஏன் சுட்டுக்கொன்று விடக்கூடாதென்று கேலியாய்க்கேட்டார். ஐயோ பாவம்! அதிகாரத்திலுள்ளவர்கள் இப்படி மதிகெட்டுப் போகவேண்டுமா? லஜபதிராய், அஜித்ஸிங் இவரால் இந்தபிரிடிஷ் இராஜ்யம் முழுகிப் போய்விடும் போலிருந்தால் அவர்களைப்பிடித்து நன்றாகக் காபந்துசெய்து தூர தேசத்தில் கொண்டுபோய் சிறைச்சாலையில் வைத்த பின்னாவது அவர்கள்செய்த மஹாபெரிய குற்றம் இன்னதென்று வெளியிடக் கூடாதா! இப்படி ஜனங்கள் சுதந்திரத்தை அலக்ஷியம் செய்து அவர்கள் மனதைப் புண்படுத்தினால் மஹாஜனங்களுக்கு மனம்கசந்து போகாதா! அரசுக்கும் குடிக்கும் விரோதமுண்டா? பிரஜைகளில்லாத அரசும அரசில்லாத குடிகளும் உண்டா? ஜன சமஷ்டியின் ஸ்வரூபமே கவர்ன்மென்டன்றிவேறல்ல.

## காகினாடாவில் குழப்பம்.

காகினாடாவில் விஷமக்காரப் பையன்கள் சிலர் அந்த ஊர் டிஸ்திரிகட் மெடிகல் ஆபிஸர் டாக்டர் கெம்ப் அவர்கள் சவாரிபோய்க் கொண்டிருக்கும் பொழுது அவரை நோக்கி வந்தே மாதரம் என்று காரணமின்றி விளையாட்டாகக்கத்த, அவர் கோபங்கொண்டு அந்தப்பையன்களில் ஒருவனைப் பிடித்து அடித்துதைத்துக் குத்துபிராகப்போட்டு விட்டுப் போய்விட்டார். ஆஸ்பத்திரியில் அப்பையனுக்கு வேண்டிய வைத்திய உதவி கிடைக்கவில்லையாம். அப்பையனுடைய தகப்பனார் கலெக்டரைக்கண்டு விண்ணப்பம் செய்துக் கொண்டும் விமோசன மொன்றும் கிடைக்கவில்லை. இந்தப்பரிதாப சம்பவத்தைப்பார்த்த சாமான்ய ஜனங்கள் மனம் பொங்கிக்கொதிக்க, ஊர் ஜனங்கள் ஒன்றாகக் கூடி வெள்ளைக்காரர் கிளப்பில் சாப்பிட்டுக்கொண்டிருந்த டாக்டர் கெம்ப் அவர்கள் பேரில் தங்களுக்குள்ள கோபத்தைத்தீர்த்துக்கொள்ளும் பொருட்டு அந்த கிளப்பு கண்ணாடிஜன்னல்களைத் தகர்த்துச் சேதம்செய்து அவரையும் அடிக்கப்போனார்களாம. அப்பொழுது அந்த டாக்டர் ஒரு உள்ளே புகுந்து பூட்டிக்கொண்டு பிறகு இரகசியமாய் நழுவி விட்டார். பிறகு அதிகாரிகள் கலகத்தையடக்கும் பொருட்டு துருப்புகளை வரவழைத்து, கூட்டத்தைக்கலைத்து, தெருவுகளில் எல்லாம் காவல்போட்டு பந்தோபஸ்து செய்யத்துவக்கினார்கள். கவர்ன்மெண்டார் இந்தக் கலகத்தைக்கேட்டு இன்னும்இரண்டு வருஷத்துக்கு காக்கினடாவிலுள்ள ஜனங்களுக்கு அதிக வரிபோட்டு அதைக்கொண்டு இன்னும் மிகுதியாய் போலீஸ் காவல் வைத்திருக்கிறார்கள். இப்படியெங்கும் சர்க்காருக்கும் ஜனங்களுக்கும மனப்பொருத்தமின்றி வருத்தத்துக்கிடமான சம்பவங்கள் நேர்ந்துகொண்டு வருகின்றன. இதுவும் ஒருகாலவிசேஷம் போலும்.

## மாதாஜி மஹாராணி தபஸ்வினி.

கல்கத்தாவில் மஹாகாளிபாடசாலை யென்றொரு பிரபலமான பெண்கல்விச்சாலையிருக்கிறது. அதை யேற்படுத்தினவர் மாதாஜி மஹாராணி தபஸ்வினி என்னும் மஹாத்மா. இந்த அம்மாள் ஆற்காட்டு ராஜா வமிசத்தைச்சேர்ந்தவர். அவருடைய தாய்வழியில் நமது ஆரணி ஜாகிர்தாருக்கு பந்து. இவர் பாலியத்திலேயே மதப்பற்றுள்ளவராய், ஸ்தலயாத்திரை செய்யப்புறப்பட்டார். இவர் இந்தியா வெங்கும் க்ஷேத்திர யாத்தி

ரை செய்துள்ளார். நன்றாகப் படித்துத்தேறினவர். ராஜவம்சத்தி லுதித்தவரானதால் குதிரை யேற்றம் முதலிய வித்தைகளில் நன்றாகப்பழகியுள்ளவர். இவர் நேபாளத்தில் சில காலம் தங்கியிருந்தார். அங்கே நேபாளராஜ குடும்பத்துக்கு மிகவும் வேண்டியவராயிருந்ததன்றி இவருடைய தபஸ் விசேஷத்தால் எல்லோராலும்நன்குமதிக்கப்பெற்றுவந்தார். இவர் ஸம்ஸ்கிருதத்தில் தேர்ந்தவராயிருந்ததன்றி நல்ல வேதாந்த ஞானமுமுண்டு. சித்திர வேலையிலும் கைபழகினவர். சமையல் செய்வதில் நளபாகம் பீமபாகம் அறிந்து செய்யவல்லவர். இவர் 14-வருஷங்களுக்கு முன் கல்கத்தாவுக்கு வந்துசேர்ந்தார். வைத்யநாத க்ஷேத்திரத்திற்கு வந்து அங்கிருந்து புரிக்கு க்ஷேத்ர யாத்திரைசென்றார். திரும்பிக் கல்கத்தாவுக்கு வந்தபொழுது இந்தியன் மிர்ரர் பத்திராசிரியர் ஸ்ரீ நரேந்தரநாத் சேனர் அவர்கள் மாதாஜியைக்கண்டு அவர் கல்கத்தாவில் தானே தங்கியிருந்து அங்கே பெண்கல்விச்சாலையொன்று ஏற்படுத்தி நடத்த வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அதற்கு மாதாஜியவர்கள் உடன்பட்டு அப்படியே ஒரு பாடசாலை யேற்படுத்தினர். முதலில் மஹாராணி ஸ்வர்ணமாயி அவர்கள் அவருக்குப் பாடசாலை யேற்படுத்தக் கட்டடமும் பண உதவியும் செய்தார். பிறகு அந்த இடம் போதாமற் போகவே வேறொரு பெரியகட்டடத்திற்குப் பாடசாலையை மாற்றிக் கொண்டுபோக வேண்டியதாக நேரிட்டது. இங்கேயிருக்கையில் இப்பொழுதுள்ள தர்பங்கா மஹாராஜா அவர்களின் தமயனார் வேண்டிய உதவிசெய்து வந்தார். மாதாஜி மஹாராணி தபஸ்வினியின் மேல்பார்வையில் அப்பாடசாலை வர வர விர்த்தியாய் வந்தது. அங்கே படித்த பெண்களெல்லாம் இல்லறத்திற் சிறந்து வாழ யோக்கியதை யுள்ளவர்களாகவிருந்தது கண்டு பிள்ளைகளைப் பெற்றோர்கள் அப்பாடசாலையில் படித்துவரும் பெண்களிலிருந்தே தங்கள் புத்திரர்களுக்குப் பெண் பார்த்து வந்தார்கள். இதனால் அப்பாடசாலையின் பேரும் கீர்த்தியும் மிகப்பெருகி வந்தன. இப்படி 14-வருஷம் அம்மஹாகாளிப் பாடசாலையை நடத்தி வந்து அது பின்னும் விர்த்தியாக அதற்கு சொந்தக்கட்டட முதலானது ஏற்படுத்தி என்றும் ஸ்திரமாயிருந்துவரும்படியான நிலைக்குக் கொண்டுவந்து வைத்தார். இந்த மஹாத்மா சென்ற ஏப்ரல்மீ 20உ வசந்த சப்தமியன்று ஸ்ரீ காசியில் சம்பூர்ண தசையடைந்தார். நமக்குள் வைதிக சிந்தையுள்ள ஹிந்துக்கள் பெண் கல்வி விஷயத்தில் அசிரத்தையா யிருக்கிறார்களென்பது பொய்யென்று காட்ட இம்மஹாகாளி பாடசாலை நிதர்சனமாகவிருந்தது. இப்பொழுது இங்கிலீஷ் படித்துக்கெட்டுப் போன பிள்ளைகளைப்போல, தங்கள் பெண்களையும் அவர்வழி பற்றவிட அனேகருக்கு இஷ்டமில்லை யென்பதுண்மையே. ஆனால் மாதாஜி மஹாராணி தபஸ்வினியைப்போல் ஸம்ஸ்கிருதத்திலும் வேத வேதாந்தங்களிலும் கற்றுத்தேர்ந்து ஆத்மானுசந்தானம் பண்ணிவரும் தபசிகள் இவ்விஷயத்திற் பாடுபட்டுழைக்க முன்வரில் அவர்கள் தங்கள் பெண்களைப்படிக்க வைப்பதில் பின்வாங்குவதில்லை யென்பது திண்ணம். மாதாஜி தபஸ்வினியைப்போல் தபமஹிமையுள்ள பெண்மணிகள் நம்மில் எத்தனையோபேர்கள் இங்குமங்கும் அருமையாய்க் கிடைக்கத்தக்கவர்களாயிருக்கிறார்கள். அவர்கள் உண்மையை நம்மவர்கள் அறிய மாட்டாமையால் அவர்கள் பொதுவிஷயங்களில் முன்னிட்டுழைக்க வருவதில்லை. அவர்களுண்மையுணர்ந்து உள்ளபடி அவர்களை ஆதரிப்பாருண்டானால் அவர்களால் நம் தேசத்துக்கு எவ்வளவோ க்ஷேமமுண்டாகும். இதை வற்புறுத்தி யுணர்த்த மாதாஜி மஹாராணி தபஸ்வினி அவர்கள் நல்லுதாரணமாய் விளங்கினவராதலால் அவருடைய விர்த்தாந்தத்தை இங்கே வெளியிட்டுரைக்க நமக்கு மிகவும் சந்தோஷமாயிற்று. அகத்தில் தூய்மையிருந்தாலன்றி வெளியில் தூய்மையைக் காண்பதரிதாதலால் அகத்தூய்மை நம்மவர்களிடத்தில் அதிகமாய் விர்த்தியாகவேண்டும். இதற்கு சாது சங்கத்தை தவிர வேறு மேலான சாதனமில்லை.

## இராஜ மஹேந்திரம் காலேஜ் மாணவர்கேஸ்.

இராஜ மஹேந்திரத்திலுள்ள கவர்ன்மெண்டு காலேஜில் படிக்கும் மாணாக்கர்கள் அக்காலேஜ் தலைவர் மிஸ்டர் ஹன்டர் அதிகாரத்தைமீறிநடந்தார்களென்றுகவர்ன்மெண்டார் அவர்களை மிகவும் கடினமாய்த் தண்டித்து ஒரு உத்திரவு பிறப்பித்திருக்கிறார்கள். இராஜ மஹேந்திரத்தில் பாலபாரத ஸம்ஹிதியென்றொரு சங்கமிருக்கிறது. அது பாலவயதுள்ள மாணாக்கர்கள் சேர்ந்து ஸ்வதேசாபிமானம், ஸ்வதேச க்ஷேமம் முதலிய ஸ்வதேச குணசம்பத்துப் பெறுவதற் கனுகூலமாக ஏற்படுத்தப்பட்டது. இந்தச்சபையின் நோக்கத்தைப்பற்றி ராஜமஹேந்திரம் காலேஜ் தலைவர் மிஸ்டர் மார்க் ஹன்டர் ஏதோ சந்தேகங்கொண்டு அந்தக்காலேஜ் மாணாக்கர் தற்காலத்துக்கு அந்த சபையில் சேர்ந்துழைக்கக் கூடாதென்று ஒரு உத்திரவு செய்தார். பிறகு சேரலாமென்று அனுமதிகொடுத்தார். மாணாக்கர்கள் பொது விஷயங்களைப்பற்றி ஜனங்களுடைய மனதைக் கலக்கத்தக்கவிதமாக எவ்வித முயற்சியும் செய்யக்கூடாதென்றும் அதினால் அவர்களுக்குண்டாம் மனக்கிளர்ச்சியும் மனக்கலக்கமும் அவர்கள் படிப்புக்கு விரோதமாயிருக்கிறதென்றும் சொல்லி எச்சரித்திருந்தாராம். பி. ஏ. வகுப்பில் வாசிக்கும் மாணாக்கர் ஒருவர் (ஜெ, இராமச்சந்திரராவ்) மிஸ்டர் ஹன்டர் உத்திரவை மீறி நடக்கும்படி மாணாக்கர்களைத் தூண்டிவிட்டாரென்று அவரைக்கூப்பிட்டு விசாரித்து அவரைக் காலேஜைவிட்டு தள்ளிவைத்தார். பிறகு அவர் மன்னிப்புக் கேட்டுக்கொண்டதின் பேரில் அவரை சேர்த்துக்கொண்டார்.

மிஸ்டர் பால் இராஜ மஹேந்திரத்திற்கு வந்தபொழுது மாணாக்கர்கள் அவருக்கு நல்வரவு கூறி அவர்செய்த பிரசங்கங்களைக் கேட்டுக்கொண்டாடினது காலேஜ் அதிகாரிகளுக்குப் பிடிக்காமல் அவர்களைத்தடுக்க யத்தனித்தார்கள். இந்த யத்தனம் பலிக்கவில்லை. மாணாக்கர்கள் வந்தேமாதரம் பதக்கமும், வந்தேமாதரம் சீட்டும் தரித்துக்கொண்டு காலேஜுக்கு வந்தது அக்காலேஜ் தலைவருடைய உத்திரவுக்கு விரோதமென்று அந்த சின்னங்களை நீக்கச்சொன்னார். மாணாக்கர்கள் அதற்கு உடன்படாதுபோக காலேஜ் அதிகாரிகளுக்கும் மாணாக்கர்களுக்கும் விரோதம் நேர்ந்தது. மிஸ்டர் ஹண்டர் தன் உத்திரவுக்குக் கீழ்ப்படியாதவர்களை யெல்லாம் காலேஜை விட்டுத்தள்ளிவிட உத்தேசித்தார். இதுகண்ட மாணாக்கர்கள், தாங்களே காலேஜை விட்டுப்போய் விட்டார்கள். இப்படி அற்பவிஷயம் பெரிய கலகமாக முடிய, வித்தையிலாகாத்தலைவர் இராஜமஹேந்திரம் சென்று நடந்தவற்றை விசாரித்துக் கவர்ன்மெண்டாருக்கு ரிபோர்ட்டு செய்தார். அந்த ரிபோர்ட்டின் பேரில் கவர்ன்மெண்டார் உத்திரவு பிறப்பித்திருக்கிறார்கள்.

அந்த உத்திரவுப்படி கவர்ன்மென்டார் அக்காலேஜ் தலைவர் மிஸ்டர் மார்க் ஹன்டர் செய்ததெல்லாம் சரியென்றும், மாணாக்கர்கள் செய்ததெல்லாம் பிசகென்றும் தீர்மானித்து அதற்காக அவர்களைக் கடினமாகத் தண்டித் திருக்கிறார்கள்.

உபாத்திமைத் தொழிலுக் கருகராகப்படித்து வந்த ஹரி ஸர்வோத்தமராவ் எம். ஏ. அவர்களை உபாத்திமைத் தொழிலுக் கருகரல்லவென்றும் அவரையாரும் அவ்வேலைக்கு நியமிக்கப்படாதென்றும் தீர்மானித்திருக்கிறார்கள். மற்ற மாணாக்கர்களில் சுமார் 171-பேர்களைக் காலேஜைவிட்டுத் தள்ளினதன்றி அவர்கள் இராஜமஹேந்திரம் காலேஜிலாவது வேறு எந்தக் காலேஜிலாவது சேர்த்துக்கொள்ளப்படமாட்டார்களென்று உத்திரவு பிறப்பித்திருக்கிறார்கள். அன்றி அவர்கள் ஒரு வருஷத்திற்கும் இரண்டு வருஷங்களுக்கும் யூனிவர்ஸிடிப் பரீக்ஷைகளுக்குப் போகக்கூடாதென்று தடுத்து அவர்களைச் சேர்த்துக் கொள்ளாதபடி யூனிவர்ஸிடி ஸிண்டிகேட் சபையாரைக் கேட்டுக்கொள்ளும்படி வித்தியா இலாகாத்தலைவரைக் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள்.

இது என்ன அநர்த்தம்! ஏதோ சிறுவர்கள் தலை தெரியாமல் கூத்தாடினால் அவர்களைச் சுமாராகக்கண்டித்து நயபயத்தால் திருத்தியாளாமல் இப்படிக் கடூரமாய்க் கண்டித்தால், இளமனது கசந்துபோகாதா? 171-மாணாக்கர்களையிப்படித்திடீரென்று சந்தியில் விட்டு விட்டால் அவர்கள் என்னசெய்வார்

கள் ! சிறுவர்மனதை அன்பு அனுதாபத்தால் கவர்ந்து அவர்களை நல்வழிபடுத்துவதே நல்ல உபாத்தியாயர்க்கு அடையாளம். சிறுவர் மனதை வசப்படுத்த அறியாதவர் உபாத்திமைத்தொழிலிற் கைதேர்ந்தவரென்று மதிக்கப்படமாட்டார். "இளங்கன்று துள்ளு பயமறியாது" என்றொரு பழமொழியுண்டு. இளங்கன்று துள்ளிற்றென்று அதன் காலை யொடித்து விடலாமா, அல்லது கட்டுத்தரையோடு ஒட்டக்கட்டி அதன் கொழுப்பையடக்கி விடலாமா? இளங்கன்று துள்ளத்தான் துள்ளும்; அது அதற்கு ஸ்வபாவம். ஸ்வபாவகுணம் எப்பவும் குற்றமாகாது. ஸ்வபாவகுணத்தைமுறட்டுத்தனமாக மாற்றினால் அது மாறுமா? ஸ்வபாவமறிந்து அதன் வழிப்பட்டு அதைமாற்றினால் மாற்றலாமேயன்றி கெடுபிடியதிகாரத்தால் ஸ்வபாவத்தை மாற்றயத்தனித்தால் "முதற்கோணல் முற்றும் கோணல்" என்று மேலுமேலும் குணம்கோணலாகவேதான் போகும். இதையறிந்து நடந்து கொள்வதே மேலோர்க்கழகு. "சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம் பெரியோராகிற்பொறுப்பதுகடனே!" ஆகையால் சிறுபிழைசெய்த சிறுவர்களைப் பெரும்பிழைசெய்தனராகக் கண்டித்தல் யுக்தமன்று; தத்தாரிப்பிள்ளையின் கதையைக்கொண்டுயேசுகிறிஸ்து குணக்கேடரைத்திருத்தும் வகையுபதேசித்தது காலேஜ் அதிகாரிகளுக்கும் கவர்ன்மெண்டாருக்கும் தெரியாததல்ல. சிறியோர் பெரும்பிழை செய்தனராயில் பெரியோர் அப்பிழைபொறுத்தலுமரிதே" யென்று சொல்லியிருக்கிறார். அப்படிப் "பொறுத்தலரிது" என்றது அவர்கள் சினந்தாங்காமை காரணமாகச்சொன்னதன்று. ஆனால் சிறுவர் நன்மையை நாடிப் பெரியோர் அப்பிழைகளைப் பொறுத்துப் கடுமைபாராட்டாது தண்டிக்க வேண்டுமென்பதே. அப்படித் தண்டிப்பதில் சிறுவர்களுடைய நன்மையே பிரதானமாகக் கொண்டு தண்டிக்கவேண்டும். இந்த உத்திரவு சிறுவர்களுக்கு அவர்கள் குணக்கேடால் வரும் தீமையைவிட அதிகதீமை யிழைப்பதன்றி அவர்கள்மனப்போக்கைத் திருப்பாது போனவழியிலேயே உறுதிப்படுத்துந்தன்மையதாக விருப்பதால் கவர்ன்மெண்டார் இவ்வளவு கடினமான உத்திரவு பிறப்பித்தது இராஜ்யக்ஷேமத்தை யுத்தேசித்தாவது பிழைத்த மாணாக்கர்கள் க்ஷேமத்தை உத்தேசித்தாவது உசிதமென்று சொல்லத் தக்கதாயில்லை. அதேவிதமான குற்றம் சென்னையில் எல்லாக்காலேஜ்களிலும் படிக்கும் மாணாக்கர்கள் செய்திருக்கிறார்கள். இராஜமகேந்திரம் காலேஜ் தலைவர் பிடிவாதத்தினாலும் பிள்ளைகளின் குணமறிந்து விட்டுப் பிடிக்கும் சாமர்த்தியமில்லாமையாலும் அற்பசம்பவங்கள் பிரமாதமாகத்தோன்றும்படியாய்விட்டன. சென்னையில் கிறிஸ்தியன் காலேஜ் தலைவர் அதே சந்தர்ப்பங்களின் நடுவே இனிய வசனங்கள் சிலவற்றால் மாணாக்கர்கள் மனதைக் கவர்ந்துவிட்டார். பாலர்மனதும் பித்தர்மனதும் பேதையர்மனதும் "கொண்டது விடாது" பிடிக்கும் தன்மையுள்ளது. ஆனால் அப்படி "கொண்டது விடாது" பிடிக்கும் தன்மை அவர்களிடத்தில் நீடித்திருப்பதில்லை. இந்த சூக்ஷ்மத்தையறிந்து மேலோர் அவர்களிடத்தில் சமயோசிதமாக நடந்துகொள்ள வேண்டும். மனக்கிளர்ச்சியுண்டாயிருக்கும் காலத்தில் அம்மனதை அதிகாரமுறுக்கால் அடக்கிமடக்குவது துள்ளுகிற கன்றின் காலை பொடிப்பதற்கு ஒப்பாகும்.

இது மனோதர்ம சாஸ்திரம். மனோதர்மத்துக்கு விரோதமாக நடப்பவர் மாண்புடையாராக மாட்டார். இளைஞர்மனம் திருகையிலேற்றிய மண்போல் குயவன்கைக்கு இசைந்து வளையுந்தன்மையாக விருக்கவேண்டும். அப்படிக்கில்லாமல் சற்றுக்கடினமாயிருந்தால் அதற்காகத் 'திருகை' யந்திரத்தை யொடித்தெறிந்து விடலாமா? கடினமானதின் காரணத்தையறிந்து பக்குவமாய் அம்மண்ணை இளகவைப்பதல்லவோ நல்லவேலைக்காரனுக்கடையாளம். மண் காய்ந்து கடினமாய் விட்டால், அதை ஜலம்விட்டு ஊரவைத்துப்பிசைந்து இளகவைக்க வேண்டும். அதற்காகச் சூளைபோடுவதையே நிறுத்திவிட்டால் அது குயவன் புத்திக்கும் விருத்தமல்லவா? தேகதர்மத்துக்குச் சரியானது மனோதர்மத்துக்குச்சரியாக அமைய வேண்டாமா? தேகமனோதர்மங்களை மிஞ்சி நடந்துவிட்டு, ஸர்க்காரதிகாரத்தை மீறி நடந்துவிட்டதாகக் குற்றம் சாட்டினால் அது தர்ம விதிப்படி குற்றமாகுமா? ஒருநாளுமாகாதென்க.